# ராஜ சரிதம்

## 1. ஸைரஸ்.




# HISTORY OF KINGS.

## 1. CYRUS.



BY THE LATE

T. R. SUBRAHMANYA SASTRIAL, B.A.,

*Head Master, The Chintadripet Secondary School, Chintadripet, Madras and Author of:—"Ranakesari," "Physiology and Laws of Health."*

---

MADRAS.
E MODERN PRINTING WORKS, MOUNT ROAD.
1916.

d.] [Price As. 8




# THE AUTHOR'S PREFACE.

---

"Let us live for our children," was one of the favourite maxims of *Froebel*, the *Kindergartner* of *Germany*. To lay before the children, in their early years, the beauty of nobility of character and the heinousness of crime, to make them love the former and abhor the other, to help their little minds to take firm hold of inspiring ideals—in short, to cultivate in them a true aesthetic sense,—is the duty of every one, to whom the important work of moulding the character of the future generation is entrusted. It is a pity to note that few people turn to this problem and render help in the work of putting into the hands of young boys and girls literature which would lead to results above indicated. Of course, literary work in *Tamil* and other vernaculars does not pay; and that, again, is a matter which demands the [illegible]rious attention of every patriotic citizen.

With rare insight into the child's mind, [illegible]h an instinct for what would gladden [illegible]ct its little heart, the late *Mr. Stead*

has edited quite a library of useful literature specially meant for children—I refer, of course, to "The books for the Bairns." And that is exactly the direction in which every one who wishes well of the Indian child should try to work.

For some years past, I have been comparing the European child mind and the Indian child mind in order to begin a series of continuation readers for our children; and the present series is the result. I hope that the way in which the stories are narrated would be found interesting to the children and, at the same time, instructive in more ways than one. I hope, therefore, that they would all take to it kindly and thus remunerate the author in the only way in which he desires to be remunerated for the labour of love spent over the preparation of these volumes.

T. R. SUBRAHMANYA SASTRI.

# ராஜ சரிதம்.

## LIVES OF KINGS.

---

### 1. பாரஸீகம்.

### ஸைரஸ்.

### CYRUS.

### CHAPTER 1.

---

பரதகண்டமென்று சிறப்புற்றோங்கும் நம்மிந்திய தேசத்தின் மேற்பாகத்தில் ஆப்கனிஸ்தானம், பலுச்சிஸ்தானம் என்று பெயருடைய இரண்டு தேசங்களிருக்கின்றன. அவைகளையுந் தாண்டி, மேற்கே செல்லுவோமானால், பெர்ஷியா (Persia) என்ற ஆங்கிலப்பெயர் வாய்ந்த பாரஸீகமென்ற தேசத்தை யடைவோம். பின்வரும் பக்கங்களில், இத் தேசத்தை யாண்டு வந்தவர்களுக்குள் மிக ப்ரக்யாதி பெற்றவர்களான சில அரசர்களின் சரிதைகளை இங்கு கூறுவோம்.

மஹா தீரவீர பராக்ரமசாலிகளாகவும், புவனைக வீரர்கள் என்றும் இப்புவியையே ஒரு குடைக் கீழாண்டவர்களென்றும் க்யாதி விளங்கும்படி, பூர்வ காலத்தில் தெரிந்தவரையிலுள்ள பூமியின் பெரும் பாகத்தை ஜயித்து ஆண்டவர்களுள் நல்ல ப்ரஸித்தி யுடையவர் ஸைரஸ் (Cyrus) என்ற சக்ரவர்த்தி. இவரை மஹா அலெக்ஸாண்டர் என்பதுபோல, மஹா ஸைரஸ் என்றும் வழங்குவதுண்டு. இவர் மீடர்கள் (Medes) பாரஸீகர் (Persians) என்ற இருவகை ஜாதியாருக்கும் சக்ரவர்த்தி யென்று பிரக்யாதிவாய்ந்த வர். [இந்த மீடர்கள் என்பவர் பாரஸீகத்திற்கும் சின்ன ஆசியாவிற்கும் (Asia Minor) மத்தியிலுள்ள ப்ரதேசத்தில் வஸிப்பவர்.] இந்த ஸைரஸ் என்பவ ரைப்பற்றி வேடிக்கையும் விநோதமுமான பல கதை கள் கர்ணபரைம்பரையாய் வழங்கி வருகின்றன. அவைகளுள், இவருடைய பிறப்பு ஸம்பந்தப்பட்ட கதை வெகு விசித்ரமாக விருக்கும். ஆகையின் முத வில் அவருடைய பிறப்பையும் இளமையையும் பற்றிய கதைகள் ஆரம்பிப்போம்.

இந்த ஸைரஸ் என்னும் சக்ரவர்த்தி பிறக்குங் காலத்தில் பாரஸீகத்தில் 'அஸ்டியாகஸ்' என்று ஒரு பாரஸீக அரசன் ஆண்டுகொண்டிருந்தான். இவர் ஒரு நாள் அபூர்வமான ஸ்வப்னம் ஒன்று கண்டார். இக்காலத்திலானுல், ஸ்வப்நமாவது— "டாம் நான் ஸென்ஸ்" என்று சொல்லிவிடுவோம். இந்த ஸ்வப் நம் அஸ்டியாகஸ் மனதில் சல்யமாக விருந்தது. அதன் பொருள் என்னவிதமாய் இருக்கக்கூடுமென்று தனக்

குள் தீர்மானம் செய்யமுடியாமல் அத்தேசத்தில் தொன்றுதொட்டு ஞானிகள் என்று விளங்கிவரும் தைவக்ஞர்களைத் * தருவித்து, அவர்களிடம் தான் கண்ட ஸ்வப்நத்தை ஆதியோடந்தமாகக் கூறினன். அவர்கள் இதைக் கேட்டு, ஆச்சர்யமடைந்தனர். கடைசியாய் இந்தக்கெட்ட ஸ்வப்நத்திற்கு ப்ராயச் சித்தமாக, அஸ்டியாகஸ் சக்ரவர்த்தியின் குமாரத்தியான மண்டனையென்பவளை ராஜகுலமல்லாத வேறு குலத்தில் மணம்செய்துவைக்க வேண்டுமென்று அரசனுக்கு யுக்திசொன்னர்கள். அரசனும் தைவக்ஞரின் ஆக்ஞையைச் சிரஸாவஹித்து, அப்படியே செய்வித்தனன்.

இன்னும் சிலகாலும்கழிக்கவே, அரசன் வேறொரு ஸ்வப்நம் கண்டான். அது யாதோவெனில், தன்னுடையபெண்ணை அடியாகக்கொண்டு, ஆகாசவியாபியாக ஒருமரம் வளர்ந்து தழைத்தோங்கியதாகவும், அதன்நிழல் ஆசியாகண்டம் முழுதும் பாவியிருந்ததாகவும் ஸ்வப்நம். மறுபடி அரசனுடைய மனம் குழம்பிற்று. "என்னே! இதுவிந்தை! நமக்குண்டாகும் கனவுகளெல்லாம் நம் குமாரத்தி ஸம்பந்த

---

* தைவக்ஞர் என்பது வடமொழி. பூர்வஜந்மத்தில் செய்த புண்ய அல்லது பாபகர்மங்களடியாக இந்த ஜந்மத்தில் சுக துக்கங்கள் உண்டாகின்றனவென்பது கொள்கை யல்லவா? அந்தப் பூர்வ ஜந்ம கர்மத்திற்கு தைவம் என்று பெயர். தைவத்தை யறிவார் வருவதுணர்வாராதலால் தைவக்ஞர் என்னும் பதத்திற்கு ஜ்யோதிஷர் என்று பொருள் வந்தது.

மாகவே உண்டாகின்றன. ஆதியிலுண்டான ஸ்வப்நம் நமக்குக்கெடுதலை விளைக்குமென்றும், அதற்கு ப்ராயச் சித்தமாக, அப்பெண்ணை ராஜகுலத்தைவிட்டு, வேறு குலத்தில் மணம்புரிவிக்க வேண்டுமென்றும் தைவக்ஞர் அறிவித்தனர். அப்படியும் செய்தோம், அப்பொழுதும் இந்த துஸ்ஸ்வப்நம் நம்மை விடுவதாயில்லை! இதன் பலன் எப்படியிருக்குமோவோ!" என்றிப்படி யோசித்து மறுபடி ஞானிகளைத் தருவித்தான்.

அரசன் அவர்களிடம் தான் கண்ட கனவைச் சொல்லுதலும் அவர்கள் நகைத்து "ஒ ஹோ கடவுளின் ஆணையைக் கடக்கக் கடையராம் மனிதராலாகுமோ. ராஜந், உன் குமாரத்தியிடம் உத்பவித்த விருக்ஷம் ஒரு புத்திரனைக் காண்பிக்கிறது. அவ்விருக்ஷத்தின் நிழல் உலகமெங்கும் வ்யாபித்தது. அப்புத்திரன் இப்புவநம் முழுதையும் ஜயித்து, விஜயசாலியாய் விளங்குவான் என்பதை அறிவுறுத்துகிறது. அவன் ஆசியாகண்டம் எல்லாம் ஜயித்து, ஏகசக்ராதிபதியாய் வாழ்வான். அவனே உம்மையும் தோற்கடித்து, கைதியாக்குவான். இதுவே இந்த ஸ்வப்நத்தின் பொருள்" என்று சொல்லி அரசனிடம் உத்திரவுபெற்று, தம் மிருக்கையை யடைந்தனர்.

இதனைக்கேட்ட அரசன் சிந்திக்கலானான் "தைவக்ஞர் ஏன் நம்மிடம் பொய் சொல்லவேண்டும்? அவர் சொல்வது உண்மையாகவே யிருத்தல்வேண்டும். ஆதியில் மண்டனையைப் பிறகுலத்தில் விவாகம் செய்து கொடுக்கவேண்டுமென்று அவர்கள் கூறியதும், அவ

ளுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கு க்ஷத்திரியதேஜஸ் இல்லாமல் செய்யக் கருதியேபோலும். இந்த ஸ்வப்னமோ, மண்டனைக்கு ஒரு குமாரன் பிறந்த தக்ஷணத்திலேயே தோன்றியிருக்கிறது. ஆதலால், இக்குமாரன் நம்முடைய ராஜ்யத்தை ஆக்ரமிப்பதற்கே பிறந்தவன் என்பதில் ஸந்தேகமில்லை. இருந்தாலும் நாம் சும்மாயிருக்கக்கூடாது. நம்மால்கூடிய அளவு நமக்கு வரவிருக்கும் ஆபத்தைத் தவிர்ப்பதற்கு முயலவேண்டும். இதற்கென்ன செய்யலாம் என்று ஆலோசித்தவனாக, தன்னாஸநத்தில் சாய்ந்து, வெகு நேரம் எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். முடிவில் அவனுக்கோரெண்ணந் தோன்றியது. அந்த ஸமயத்தில் அவ்வித யுக்தி தனக்குத்தோன்றியதற்காகப் பேருவகை பூத்தான்.

உடனே, அநேககுலபரம்பரையாக மிகுந்த ராஜ விச்வாஸத்துடன் வேலை பார்த்து வந்த வம்சத்தில் பிறந்த 'ஹார்பகஸ்' என்பவனை முன்னிலைக்குத்தருவித்தான்.

"ஹார்பகஸ்! உன்னுடைய முன்னோர்கள் ராஜபக்தியில் சிறந்து விளங்கியது வாஸ்தவமானல், அரசனுடைய நன்மையைக் கோறுபவன் என்பது உண்மையானல், நீ இப்பொழுது உடனே சென்று மண்டனைக்குப் பிறந்திருக்கும் குழந்தையை அவளிடமிருந்து பிரித்துக் கொண்டுபோய், நகருக்கு வெளிப்புறத்திலுள்ள மலையின்பேரில் " காகமோடு கழுகலகை நாய் நரி" களுக்கு ஆஹாரமாகும்படி போட்டுவிட்டு வர

வேண்டியதென்று உத்திரவிடுகிறேன். என்ன சொல்லு கிருய்? என்று அரசன் வினுவினுன்.

ஹார்பகஸ் நடுநடுங்கினுன். அரசனுணை மறுப் பதிற்கில்லே. அங்கீகாரம் செய்ததற்கர்த்தமாய் தலே யை யாட்டினுன்; மண்டனேயிடம் வந்து குழந்தையை எடுத்துக் கொண்டும் போய்விட்டான்.

ஹார்பகஸ் என்னும் ப்ரபுவினுடைய மனநிலேமை வர்ணிக்கக்கூடியதன்று. தன் வீட்டிற்குள் நுழைந் தான். கண்களில் நீர் ஆருகப்பெருகத் தலேப்பட்டது. அவரை யெதிர்கொண்டழைக்கவந்த அவர் பத்நி, விம்மி விம்மி அழுதுகொண்டும், கண்ணீர் தாரையைப் பெருக விட்டுக்கொண்டும், அப்பொழுதுதான் பிறந்த ஒரு பச்சைப்பாலகனே தன் மார்போடணேத்துக்கொண்டும், வீடு திரும்பிவிந்த தன் கணவனேக் கண்டு மனங் கலங்கினுள்.

"ஐயோ, கண்மணி, இந்தக் குழந்தையை, ஸகல ராஜலட்சணங்களு மமைந்த இக்குழந்தையை, அரசன் கொல்லும்படி ஆணேயிட்டிருக்கிருன். இக்குழந் தையை நான் எப்படிக் கொல்லுவேன்" என்று ஹார் பகஸ் அலறினுன்.

"குழந்தை யாருடையது?" என்று அவர் மனேவி வினுவினுள்.

"குழந்தை யாருடையது! மண்டனேயுடையது தான்! அரசன் ஸ்வப்நங்கண்டால் மண்டனேக்கன்றி வேறு யாருக்கு அநர்த்தம் விளேயும்! ஐயோ தெய் வமே! உனக்கு கண்ணில்லேயா!" என்று கூவினுன்.

அவன் மனவியும் அழ ஆரம்பித்துவிட்டாள். "ஐயோ! என்ன லட்சணமான குழந்தை! இது ஏன் பிறந்தது, தெய்வத்திற்குக் கண்தானில்லே! அல்லது தெய்வம் க்ரூரமான செய்கைகளில் ஸந்தோஷிக்கிற தென்னவேண்டும்! என்று துக்கித்தாள்.

"ஐயோ! ராஜபக்திக்கும் ராஜவிச்வாஸத்திற்கும் இதுதானு பிராயச்சித்தம்: வேறொருவருமில்லேயா! பழிபாவத்திற்கு நான்தானு பாத்ரம்! அரசன் கோபம்! ஐயோ நான் என்ன செய்வேன்!" என்று வாய்விட்டலறி கைகளால் முகத்தை மூடிக்கொண்டு அழுதான்.

இவர்கள் இங்கு இப்பாடு படுவார்களானுல், குழந்தையைப் பறிகொடுத்த மண்டனேயின் துக்கம் எவ்வாறிருக்குமென்று படிப்பவர்கள் ஊஹித்தறிந்து கொள்ள வேண்டியதுதான்.

கடைசியாய் ஹார்பகஸ் "இந்தக்குழந்தையை நானே கொண்டுபோய் மலேயில் போட்டு வருவதென் பது அஸாத்யமான கார்யம். அர்சனுணேயைத் தவிர்ப்பதென்பதும் முடியாத கார்யம். அரசன் வேலேக் காரர்களில் எவ்வளவோ பெயர்களிருக்கிருர்கள். அவர்கள் தலேயில் இந்த பாரத்தைப்போட்டு விடுகின்றேன்" என்று ஒருவழியாய் தன்னேயே தான் ஸமாதானப் படுத்திக்கொண்டான்.

ஆகவே, அரசனுடைய கோர (மாட்டுக்கொட்டில்) த்தில் வேலேயாகவிருந்த ஒரு இடையனே ஹார்பகஸ் அழைத்தான். அவனும் ஹார்பகஸ் தன்னே

யழைக்கவேண்டிய காரண மின்னதென்று அறியக் கூடாமல் வியந்தான். அன்றியும் அவன் வருவதற்கும் ஸமய பேதகமாயிருந்தது. ஏனெனில் அவ்விடையனுடைய மனைவியும் அப்பொழுதுதான் ப்ரஸவித்திருந்தாள். ஒரு சிறு ஆண்குழந்தையைக் கண்டு அவன் மனமகிழ்ந்திருந்த ஸமயம் அது. இருந்தாலும் ஹார்பகஸ் அரசனுக்கு நிரம்ப வேண்டியவனாதலால் புகல் சொல்லத்துணியாது, அவன் முன்வந்து குழந்தையை யேற்று மலைச்சாரலில் தன் குடிசைக்குவந்து சேர்ந்தான். அவனுடைய முகம்வாடி துக்கம் நிறைந்திருந்தது. வீட்டிற்குள் நுழைந்ததும் தன்னுடைய குழந்தை இறந்ததைக்கண்டான். மனைவியிடம்வந்து அவளுக்குத்தேறுதல் சொல்ல அவன் ஆரம்பிக்கும் தறுவாயில் அவன் மனைவி "அதுகிடக்கட்டும் நான் இதில் துக்கமடையவில்லை. அதில் என்ன ப்ரயோஜனம். இந்தக்குழந்தையேது? எங்கிருந்து கொண்டு வந்தீர்கள்? உங்கள்முகம் ஏன் வாட்டமடைந்திருக்கிறது அதைச் சொல்லுங்கள்" என்றாள்.

"ஐயோ அந்த வயிற்றெரிச்சலை நீ யேன்கேட்கிறாய்? நான் போயிருந்தேனா? உடனே, அவ்விடத்தில் வீட்டார் அனைவரும் கண்ணும் கண்ணீருமாகவிருந்தார்கள். எனக்கு மிகவும் பயமாகவிருந்தது. என்னமோ, ஏதோ, என்றுபலவாறாய் எண்ணினேன். இரண்டாவது வாசற்படிகடந்து உள்ளேபோகவும், ஒரு சிறு குழந்தை 'கூவா', 'கூவா' வென்று கூவியழுது கொண்டிருந்தது. அதுதான் இக்குழந்தை. பார்.

இதன் பேரில் போடப்பட்டிருக்கும் விலையேறிய பட்டாடைகள். ஹார்பகஸ் அக்குழந்தையின் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார்; என்னைக் கண்டதும் வெகு கண்டிப்பான குரலில் "டே! இக் குழந்தையைக் கொண்டுபோய் நாய் நரிகள் தின்னும்படி மலையில் எறிந்துவிட்டு வரும்படி உனக்கு இராஜாக்ஞாபனம் ஏற்பட்டிருக்கிறது. தவறுவாயானால் உன் தலைக்கு வரும்" என்று சொன்னார். நான் உள்ளே நுழைவதற்குமுன் என் காதில் பட்ட சிலவார்த்தைகளால் இது மண்டனையம்மாள் குழந்தை யென்று தெரிந்து கொண்டேன். ஹார்பகஸ் பேசினமாதிரியில் எனக்கொன்றும் தோன்றவில்லை. பதில் பேசாமல் குழந்தையை யெடுத்து வந்தேன்" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டான்.

அப்படியானால், பிறகு? யென்று கேட்டாள் அவன் மனவி.

"பிறகென்ன? நம்முடைய குழந்தையோடு இந்தக் குழந்தையையும் மலையில் யெறிந்துவிட்டுத் திரும்பியும் பாராமல் வந்துவிட வேண்டியதுதான். வேறென்ன விருக்கிறது."

"இந்த ராஜகுலக் குழந்தை பிழைக்கவேண்டியதற்காகத்தான் நம்முடைய குழந்தை இறந்ததென்று உமக்குத் தோன்றவில்லையா?" என்றாள் அவன் மனவி.

"அதெப்படி."?

"இரண்டு குழந்தைகளையும் ஒத்துப்பாருங்கள். வர்ணத்தில் சிறிதேனும் பேதமில்லை. நம் குழந்தை இறந்த சங்கதியும் இங்கு ஒருவருக்கும் தெரியாது, ஆதலால் மண்டனையின் குழந்தை யணிந்திருக்கும் ஆடைகளைக் கழற்றி இவ்விறந்த குழந்தையை யணி யச்செய்து, இதைக் கொண்டுபோய் மலையில் எறிந்து விட்டு வரவேண்டியதுதான். மண்டனையின் குழைந் தையை நம்முடை குழந்தையாகவே வளர்ப்போம். வேறென்ன, ஒருயிரைக் காப்பாற்றியவராவோம். கடவுள் நமக்கு ஒத்தாசை செய்வார். கலங்காதேயுங் கள்," என்றாள் அவன் மனவி.

ஸந்தோஷத்தால் உடல் பூரித்து நின்றான் இடை யன். "தாமதிக்காதேயுங்கள்; சீக்கிரம். ஸந்தேஹத்திற் கிடங்கொடுக்கலாகாது" என்று மனைவி த்வரிதப்படுத்த இடையன் வெகு வேகமாய் அக்குழவிகளின் உடை களை மாற்றினான். சற்று நேரத்திற்கெல்லாம் இறந்த குழந்தையை யெடுத்து மலையினுச்சியை நோக்கிச் சென்றான். இறந்தகுழந்தையை நாய் நரிகள் தமக் காகாரமாக்கிக்கொண்டன. மூன்று நாட் கழித்து, ஹார்பகஸ் ஒரு தூதுவனை யனுப்பி, அக்குழந்தை யைக் கொன்றதற்கு ஸாக்ஷ்யம் கேட்க, இடையன் அவனை மலைக்கழைத்துச் சென்று, குழைந்தையின் மீத மிருந்த எலும்பு முதலியவகைகளைக் காண்பித்து, பிறகு அவைகளைப் பூமியில் புதைத்துவிட்டான். 'மண்டனை யின் குழந்தை இறந்தது' என்று ஹார்பகஸ், அஸ்டி யாகஸ் முதலியோர் நம்பியிருந்தனர். குழந்தை இடை

யர் வீட்டில் வளர்ந்து வந்தது.* இக்குழந்தைதான் பிற்காலத்தில் 'மஹாஸைரஸ்' என்று உலகம் புகழ் கீர்த்திபெற்று விளங்கிய சிசு.

---

* வஸுதேவர் விவாஹ ஊர்கோலம் வரும்பொழுது கம்ஸனுக்கு அசரீரி அறிவுறுத்தினதையும், வஸுதேவரையும் அவர் மனைவியையும் ஜயிலில் கம்ஸன் அடைத்ததையும், அவர்களுக்குப்பிறந்த குழந்தைகள் எல்லாவற்றையும் தான் கொல்ல ப்ரயத்நம் செய்ததையும், கடைசியில் எட்டாவது குமாரனை கம்ஸாந்தகனை அவதரித்த (கண்ணபிரான்) குழந்தை கோகுலத்தில் கொண்டுபோய் ஆயர்பாடியில் சேர்க்கப்பட்டதுமான பாகவத கதையை இத்துடன் ஒப்பிட்டுப்பார்க்க.

# CHAPTER 2.

இடையர் குலத்தில் வளர்ந்துவந்த ஸைரஸ் உண்மையில் ராஜகுலத்தைச் சேர்ந்தவன் என்று வெளியானது நிரம்பத் தற்செயலாய் நேர்ந்தது.

ஆயர் பாடியில் மற்ற இடைக்குழந்தைகளோடு வ்யத்யாஸமில்லாமல் வளர்ந்துவந்தான். கிராமத்தின் தெருப்புழுதியில் கிடந்து விளையாடுவான். ஆயினும், ராஜகுலத்தின் ரக்தத்திற்குறிய கம்பீரமும், அதிகாரதோரணையும் அவனுக்கு ஸஹஜமாகவே வந்தன. ஒருவரையும் லக்ஷயம் செய்வதில்லையவன். விளையாட்டுகளின் மத்தியில் பையன்களுக்குள் சண்டை நேர்ந்தால் 'ஸைரஸ்'தான் நியாயாதிபதியாக நியமிக்கப்படுவான். இருதிறத்தாரையும் பக்ஷபாதமின்றி விசாரித்து, வெகு நடு நிலைமையுடன் தீர்மானம் செய்வான். இவன் வாயிலிருந்து வருவதெல்லாம் மற்ற பிள்ளைகளுக்குச் சட்டம்: இவனை யெதிர்த்து வார்த்தையாடுபவர்களே கிடையாது. பொய்சொல்லுகிறதையே வழக்கமாயுடைய பையன்களும் ஸைரஸ் முன்னிலையில் வந்தால் நிஜத்தையேதான் பேசுவார்கள். இவ்விதம் அந்த கிராமத்திலுள்ள பாலர்கள் ஸம்பந்தப்பட்ட மட்டில் ராஜாதிகாரத்துடன் வளர்ந்து வந்தான் ஸைரஸ். பத்து வருஷகாலம் இம்மாதிரி சென்றது.

ஒரு நாள் எல்லாப் பையன்களும் விளையாடுவதற்காக ஒன்று சேர்ந்தார்கள். அன்று 'ராஜாவிளையாட்டு' என்று ஓர் விளையாட்டு விளையாடுவதாகத் தீர்மானம் செய்யப்பட்டது. இது பாரஸீகதேசத்துக் குழந்தைகளுள் வெகு ஸாமாந்யமானது, ப்ரியமானது மானது. குழந்தைகளுள் ஒருவன் அரசனாகவும், மற்றொருவன் மந்திரியாகவும், அப்படியே மற்றபிள்ளைகள் இன்னம் பலவேறு உத்யோகஸ்தர்களாகவும் தங்களை பாவித்து, ராஜகார்யங்களை நிர்வகித்து நடத்துவதுபோல் அபிநயிப்பார்கள். அன்றைய தினம் ஸைரஸ் அரசனாக மற்ற பிள்ளைகளால் தேர்ந்தெடுக்கப் பட்டான். முறைப்படி மற்ற ராஜாங்க உத்தியோகஸ்தர்களும் நியமிக்கப் பட்டார்கள். உடனே தாமதமின்றி, தன்னுடைய ராஜ்யத்தில் பலவேறு சீர்திருத்தங்களைச் செய்ய ஸைரஸ் ஆரம்பித்தான். மந்திரிக்குச் சில ஏவல்களிட்டான். போர்ச்சேவகர்களை நிருத்தி வைத்து, 'கவாத்து' முதலியவை பழக்கிவைக்க மேற்பார்வை பார்த்தான். இப்படி பல ஏவல்களிட்டதில் ஒருவன் அரசனிட்ட கட்டளைக்குக் கீழ்ப்படிய மாட்டேனென்றான். வந்துவிட்டது கோபம் ஸைரஸ் ஸுக்கு. உத்திரவிட்டான் போர்ச்சேவகர்களுக்கு "கட்டுங்கள் அந்த ராஜத்ரோஹியை, அவனைக் குதிரைச் சவுக்குக்கொண்டு கை சலிக்குமட்டும் அடியுங்கள், ஸர்வதேவமயனான அரசனுக்குக் கீழ்ப்படியாதவன் தெய்வத்ரோஹியுமாவான்" என்று ஸைரஸ் கர்ஜ்ஜித்தான். அவனுடைய அதிகார தோரணையும் முகத்தில் ஜ்வலிக்கும் கோபாக்நியையுங் கண்டு மற்ற

பையன்களும் ‘ராஜத்ரோஹி’ ப்பையனைக் கட்டி வைத்து, பலமாய் அடித்துவிட்டார்கள்.

அந்த பையனுடைய தகப்பன் ராஜாங்கத்தில் செல்வாக்குள்ள ஒரு உத்யோகஸ்தன். இந்த அக்ர மத்தை அவர் அரசனிடம் தெரிவிக்க, அரசன் தூது வரை யனுப்பி “ஸைரஸ்” ஐ தன் ஸந்நிதிக்குத் தரு வித்தான். ஸைரஸ் கொஞ்சமும் அஞ்சவில்லை. அவனை அரசன் தருவித்ததற்குக் காரணமின்னதென்று அவ னுக்கு நன்றாய்த் தெரியும். இருந்தாலும், அரசன் என்னசெய்வானோ வென்ற பயம் மனதில் கிஞ்சித் தேனுமில்லை. மதம்பிடித்த கஜேந்திரன்போல் ஒய் யாரமாய் அரசன் முன்னிலையை யடைந்தான் ஸைரஸ்.

அவனுடைய முக லட்சணங்களையும் அவ னுடைய கம்பீரமான தோற்றத்தையும், பரபரப் பென்பது சற்றுமில்லாத அமைதியையும், புத்தி யின் மிகக்கூர்மையான கிரணங்களை வீசும் அவ னுடைய குறுகுறுப்பான கண்களையும், கல்பனா சக்தி யையும் புத்திவிசாலத்தையும் காட்டும் அவன் விசால மான நெற்றியையும், புஜபலபராக்ரமங்களுக்கு அறி குறியாய்நின்ற பரந்தகன்ற மார்பையும், எல்லா வற்றிற்கும் மேலாய் உலகமே ஒரு த்ரணமென்று நினைத்த பாவனையாய் அவன் நின்ற லாகவத்தையும் கண்ட அரசன் திடுக்கிட்டான். சற்று நேரத் திற்கெல்லாம், தன்புருவங்களை நெற்றி முட்டச் செல்லவிட்டு, பயங்கரமாகும்படி பையனைவிழித்து,

அவனைப்பார்த்து "ஏண்டா, சிறுபயலே! பையன்களை விட்டு, இந்த ப்ரபுவின் குமாரனை அடிக்கும்படி ஏன் செய்தாய்?" என்று கேட்டான். கேட்கும்போதே பக்கத்திலிருந்த ப்ரபுவையும் அவர்குமாரனையும் அரசன் சுட்டிக்காண்பித்தான்.

ஸைரஸ்.—நீர்தாமோ இப்பாரவஸீகத்திற் கதிபதி?

என்ன விபரீதமான கேள்வி? அரசன் கேட்ட கேள்விக்குப் பதிலொன்றையுங்காணோம்! நீர்தாமோ அரசன்? கேள்வி நிரம்ப அழகு. ஆனல் அரசனுக்குக் கோபம் பிறக்கவில்லை. அப்பையன் முன்னிலையில் அரசன் மனம் அஞ்சுவதுபோலிருந்தது. குற்றஞ்சாட்டப்பட்ட அந்தப் பையனுடைய அமைதியான முகத்தில், "இந்தக்கேள்வியில் அர்த்தம் மிகுதியாயிருக்கிறது. ஸந்தர்பமில்லாத கேள்வியென்று எண்ணவேண்டாம்" என்று எழுதியிருந்ததை அரசன் வாசித்தான். இருந்தாலும் கோபங்காட்டிய குரலிலேயே.

அரசன் :—இதென்ன! இது உனக்குத் தெரியாது! நான்தான் அரசனென்று யாருக்குத்தெரியாது?

ஸைரஸ் :—நீர் அரசனுகவிருந்தால், ஸமாசாரம் முழுவதும் விசாரித்துத் தெரிந்துகொண்ட பிறகு, என்னைத் தருவித்திருக்க மாட்டீர்கள்.!

அரசன் :—அதெப்படி?

ஸைரஸ் :—தேவரீருடைய உத்திரவுப்படி ஒரு வேலைக்காரன் நடக்கமாட்டேனென்றுல் அவனை என்ன செய்வீர்கள்?

அரசன்.—அவனை சிரச்சேதம் செய்விப்பேன்.

ஸைரஸ்.—நான் அவ்வளவுகூடச் செய்யவில்லை யே. கீழ்ப்படியமாட்டேன் என்று மறுத்ததற்கு குதிரைச் சவுக்குக்கொண்டு அடிக்கச்சொன்னேன். அவ்வளவுதானே! இதிலென்ன குற்றம்.?

அரசன்.—உனக்கேது அதற்கு அதிகாரம்? நான் அரசனுகையினுல் எனக்கு அந்த அதிகாரமுண்டு. நீ ஒரு இடையன் மகன்தானே.

ஸைரஸ்.—வாஸ்தவம். நான் இடையன் மகன் தான். எனக்கு அந்த அதிகாரம் கொடுக்கப்பட்டதால் அதைச் செலுத்தினேன்.

அரசன்.—உனக்கு யார் அந்த அதிகாரம் கொடுத்தார்கள்.

ஸைரஸ்.—நாங்கள் விளையாடிவந்த விளையாட்டில் ஸம்மந்தப்பட்டவர்கள்தான் என்னை அரசனுகத் தேர்ந்தெடுத்தார்கள். என்னுடைய வார்த்தைகளின் பிரகாரம் நடப்பதாக ஒப்புக்கொண்டார்கள். அந்த விளையாட்டு முடியும் வரையில் நான் அரசன்தான். அவர்கள் எனக்குக் கீழ்ப்படிய வேண்டியவர்கள்தாம். கீழ்ப்படியாவிட்டால் ராஜாக்ஞையை செலுத்துவதிலென்ன ஆக்ஷேபணை யிருக்கிறது?

அரசனுக்கு அவா இன்னம் அதிகப்பட்டது. அந்தப் பையனுடன் வ்யவஹரிப்பதில் ஓர் ஆநந்தம் உண்டாயிற்று, "ஆனுல் நீங்கள் அமர்ந்திருந்தது கேவலம் விளையாட்டென்பதை நீ மறந்தாய்போலும்?" என்று அரசன் வினுவினுன்.

"நான் மறக்கவில்லை. விளையாட்டென்ற ஞாபகம் முற்றிலும் உண்டு. ஆனால் நான் செய்த ராஜரீகம் சிறு விளையாட்டு. நீங்கள் செய்துவரும் ராஜரீகம் பெரிய விளையாட்டு. இதைத்தவிர இவ்விரண்டிலும் நிஜமான வேறு வ்யத்யாஸ மிருப்பதாய் எனக்குப்படவில்லை."

"என்னுடைய ராஜரீகமும் விளையாட்டா?" என்று கோபத்துடன் வினவினான், அஸ்டியாகஸ்.

"ஸ்வாமி, கோபம் கொள்ளக்கூடாது. கேட்க வேண்டும், என்னைத் தண்டிக்கவேண்டு மென்கிற அபிப்ராயம் தங்களுக்கிருக்குமானால் தண்டனைக்குட்பட ஸித்தமாயிருக்கிறேன். ஏனெனில் தங்களுக்கு அந்த அதிகாரம் கொடுக்கப்பட்டு இருக்கிறது. யாராலே? குடிகளாலே. அக்குடிகள் குற்றம் செய்த விடத்து, தாங்கள் கொடுக்கும் நியாயத்திற்குட்பட்டு, தாங்கள் கொடுக்கும் தண்டனையைப் பெற்றுக்கொள் வதாக ஒப்புக்கொண்டதனாலே. விளையாட்டில் தானே அரை நிமிஷத்திற்குமுன் ராஜாவென்று ஒப்புக் கொண்ட ஒருவனுடைய உத்திரவுக்குக் கீழ்ப்படிய மாட்டேனென்று மறுத்தவன் நாளை பெரியவனாகும் பொழுது எவ்வளவு தூரம் ராஜபக்தியுள்ள நாகரிகன் (Citizen) ஆவா னென்பதை யோசிக்கவேண்டும். அவன் இப்பொழுதே சீர்திருத்தப் படுவானானால் பிறகு இவனால் ராஜ்யத்திற்குத் தொந்தரவு ஏற் படாது. இதற்காகவே நான் அவனை தண்டிக்கும் படி உத்திரவளித்தேன். இதற்காக என்னைத் தண்டிக்க வேண்டுமென்று தங்களுடைய சித்தத்தில் உதித்

தால், அதை ஏற்றுக்கொள்ள வித்தமாயிருக்கிறேன்" என்று கம்பீரமாய் ஸைரஸ் மறுமொழி சொன்னான்.

இவ்விதம் ஸைரஸ் மறுமொழி சொன்னது அரசனைச் சற்று ஆலோசனையிலழுத்திற்று. பையன் பேசுவது இடைப்பையன் பேச்சுபோலில்லை. கையாட்டல், மெய்யசைக்கல் முதலிய ஹாவபாவாதிகள் எல்லாம் தன் குலத்தாருடையதற்கு ஒத்திருந்ததாகத் தோன்றிற்று. ஸைரஸ் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே அவன் முகத்தை யுற்று கவனித்தான். தன்னுடைய முகஜாடைகள் பூலவுமிருக்கக் கண்டான். "அப்படியிருக்குமோ?" என்று முணுமுணுத்துக் கொண்டான். இதைத் தீரவிசாரிக்க வேணுமென்று தீர்மானித்தான். இத்தனை ஆக்ஷேபஸமாதான வித்தாந்தங்களும் அவன் மனதில் அரை நிமிஷத்தில் தோன்றி மறைந்தன. பையன் பேசின ஒவ்வொரு வாக்கியமும் அவன் மனதில் நன்றாய்ப் பதிந்தது. ஸைரஸ்ஸை தன்ஸமீபம் வரச்சொல்லி, அவனைக்கட்டியணைத்து, முத்தமிட்டு "மெத்த புத்திசாலி. நீ இடையர் குலத்திற்குத் தகுந்தவனல்ல. அரண்மனை ராஜகுமாரனைப்போல் வஸிக்க யோக்கியமானவன். நீ இங்கேயே இரு. நான் உன்னுடைய பெற்றோருக்கு ஸமாதானம் சொல்லிக் கொள்ளுகிறேன்" என்று மனங்களித்துச் சொன்னான். அன்று ஸபை அத்துடன் கலைந்தது.

---

# CHAPTER 3.

ஸபையை விட்டகன்று சென்ற அஸ்டியாகஸ் ரகஸ்ய ஸமாசாரங்கள் விசாரிப்பதற்கென்று அரண்மனையிலேற்பட்ட வோர் அறையில், முகத்தில் தீப்பொறி பறக்க, பற்களை நறநறவென்று கடித்துக்கொண்டு, உட்கார்ந்திருந்தான். அவனுடைய கைகள் அடிக்கடி முஷ்டியாகப் பிடிக்கப்பட்டன. மீசையில் அடிக்கடி கைபோட்டான், 'ஹூம்' என்று இடையிடையே கர்ஜித்தான், உருமினான். மூச்சு பலமாய் விட்டால்கூட அரசனுக்குக் கோபம் வந்து விடுமோ வென்று பயந்து ச்வாஸபந்தனத்தை அப்யாஸம் செய்து கொண்டிருந்த ஒரு ஸேவகன் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தான்.

"இன்னும் வரவில்லை ஹார்பகஸ்?"

"ஸ்வாமி, வந்துவிடும் ஸமயந்தான்."

மறுபடி மூன்று நிமிஷமாயிற்று.

"இன்னும் வரவில்லையா ஹார்பகஸ்?"

உடனே ஸேவகன் வெளியே ஓடினான். ஒரு நிமிஷத்தில் திரும்பி யோடிவந்தான்.

"இதோ ஓடோடியும் வருகிறார் ஹார்பகஸ்"

"சரி. நீ போ"

உடனே மேஜையின்பேரில் வெள்ளி 'டிஷ்.' (Dish) ல் இருந்த குளிர்ந்த ஜலத்தை முகத்தில் எங்

கும் தடவிக்கொண்டு, நிலைக்கண்ணாடியில் முகத்தைப் பார்த்துவிட்டு நாற்காலியில் அரசன் உட்கார்ந்தான். 'ஹார்பகஸ்' ம் அறைக்குள் நுழைந்தான். அருகி லிருந்த ஒரு ஆஸநத்தி லமரும்படி அரசன் "ஹார் பகஸ்' க்குச் சைகைசெய்தான். அவனும் உட் கார்ந்தான். ஐந்து நிமிஷம் ஒருவரோடொருவர் பேச வேயில்லை. அரசன் ஏதோ பலமாக யோசித்துக் கொண்டிருந்ததுபோல் அச்சமயம் ஹார்பகஸ்ஸுக் குத் தோன்றியது. அரசன் ஹார்பகஸ்ஸை நோக் கினான். உடனே ஹார்பகஸ் அடியேனை யாதுகார ணம்பற்றி ஸந்நிதானத்தில் தருவித்தது? நான் வினவ லாமோ? என்று விநயமாய்க் கேட்டான்.

அரசன் நிமிர்ந்தான். "ஹா! யாதுகாரணம் பற்றி? ஆம் உன்னைத் தருவித்தேன்." யாது காரணம் பற்றி?" என்று காதில் பட்டதும் படாததுமாய் தனக்குள்ளேயே பேசிக்கொள்வதுபோல் சொல்லி விட்டு அரசன் சும்மாயிருந்தான். அரசன் மனதில் அளவற்ற துயரம் குடிகொண்டிருந்ததுபோல் அவ னுடைய முகபாவம் காட்டிற்று. ஹார்பகஸ் ஒன் றும் பேசவில்லை. அப்புறம் இரண்டுபேரும் மௌனம்.

அப்புறம் அரசன் "ஹார்பகஸ், எனக்கும் என் முன்னோர்களுக்கும் துன்பம் வந்தவிடத்து, உன் னையும் உன் முன்னோர்களையு மன்றி, நற்போதனை செய்து தேறுதல் வேறுயாரே சொல்வார்! அதற் காகவே உன்னை நான் தருவித்தேன்" என்று மிக மெலினமான குரலில் சொன்னான்.

ஹார்பகஸ் "அப்படி என்ன நேர்ந்தது" என்று பரப்புடன் கேட்டான்."

அஸ்டியாகஸ்.—"புதிதொன்றுமில்லை. பழைய ஸமாசாரந்தான்."

ஹார்பகஸ்.—"விளங்கும்படி தயைசெய்யவேண்டும்.

அஸ்டியாகஸ்.—"சுமார் பத்து வருஷங்களுக்கு ...ன் ஒரு ஸமயம் உன்னை யழைத்து, மண்டனேயின் ...மாரனைக்கொண்டுபோய்க் கொன்றுவரும்படி உத...வு செய்தேனே ஞாபகமிருக்கிறதா ?

...முகம் மாலின்யம் அடைந்தது, மனதில் குழப்... உண்டாயிற்று. ஆனால் குழந்தை யிறந்துவிட்ட...கவே ஹார்பகஸ்ஸூம் நம்பியிருந்தானதலால் ...யம் உண்டாகவில்லை.

ஹார்பகஸ்.— ஆம் இது ஞாபகமில்லாமல் போகுமா ?

அரசன்.—மூன்றுநாட் க்ரமித்து மறுபடி அக் குழந்தையைப்பற்றி விசாரித்ததில், அக்குழந்தை இறந்ததென்று நீ யறிந்துகொண்டதாக என்னிடம் வந்து சொன்னதும் ஞாபகமிருக்கிறதா ?

ஹார்பகஸ்.—ஆம்.

அரசன்.—அன்றுமுதல்தான் எனக்கு துக்கத்திற் காரம்பம். அன்றுமுதல் ஒருநாளாவது நான் ஸூகமாய்த் தூங்கினதில்லை. ஒன்றுமறியாத ஒரு சிறு குழந்தையை கேவலம் ஸ்வப்நத்தை நம்பி வதம்செய்யச் சொன்னேனேயென்று பச்சாத்தாபம் மிகுதியும் என்னைப் பீடித்தது."

குழந்தையைக் காப்பாற்றியிருந்தாலும் இந்த ஸமயம் குழந்தையை அரசனிடம் கொண்டுவந்து விட்டால் அரசன் ஸந்தோஷப்படுவான் என்று ஹார்பகஸ் நம்பினாலும், குழந்தை யிறந்துவிட்டதாகவே அவனும் நம்பியிருந்தபடியால், அரசன் ஆணையை மீறி நடந்ததென்று அரசனுக்குத் தெரிவதன்றி வேறு பிரயோஜனம் இல்லையாதலால் குழந்தையை தான் தன் கையைவிட்டு, இன்னொருவனிடம் கொ செய்யும்படி சேர்ப்பித்ததை ஹார்பகஸ் சொ வில்லை.

"ஆம். உங்கள் மாதிரியில் ஏதோ மாறுதல் டும் அடிக்கடி காணப்பட்டது. நானும் நினைத்தே ஆனால் தங்களைக் கேட்க தைரியப்படவில்லை."

அரசன்.—இருக்கலாம். அந்தத் துக்கம் இ றைக்கு என்னை யறியாமலே மூண்டுகொண்டது. யாராவது ஒரு தேவதை அக்குழந்தையைக் கொண்டு வந்து என்னிடம் கொடுக்குமானால் என்னிலும் பாக்கியசாலி யில்லையென்றே சொல்லுவேன்.

ஹார்பகஸ் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

அரசன்.—ஹார்பகஸ், நீயாவது குழந்தையைக் காப்பாற்றியிருக்கக்கூடாதா? குழந்தையைக்கொன்று விட்டதாக எனக்குறுதிமட்டும் சொல்லிக் குழந்தையைத் தப்புவித்திருக்கலாமே!

தான் குழந்தையைக் கொல்லாமல் இடையனிடம் ஒப்புவித்த ஸங்கதி அரசன் தெரிந்துதான் இப்படிச்

சொல்லுகிருனேவென்று அரைநிமிஷம் ஸந்தேஹித்தான் ஹார்பகஸ்; அரசனுக்கு அவ்விஷயம் தெரிவதற்கு நியாயமில்லையென்று ஸமாதானம் செய்துகொண்டான் அடுத்த நிமிஷத்தில்; இருந்தாலும் பதிலொன்றும் பேசவில்லை. அரசன் மறுபடியு மாரம்பித்தான் "ஹார்பகஸ்! நான்தான் ராஜ்யலோபத்தால் அக்குழந்தையைக் கொல்லும்படி உத்திரவளித்தேன். அதைக்கொல்ல உனக்கு எப்படி மனந்துணிந்தது. உன்னுடைய சித்தம் கருங்கல்லாயிருக்கவேண்டும்."

இதைக்கேட்டவுடனே ஹார்பகஸ் கண்களில் நீர் ததும்பியது. "ஸ்வாமி, என்னை மன்னிக்கவேண்டும். அக்குழந்தையைக்கொல்ல எனக்கு மனது வரவில்லை. என்ன செய்வதென்றும் விளங்கவில்லை. வெகுநேரம் யோசித்தேன்.——"

அப்புறம்! அப்புறம்! குழந்தையைக் கொன்றுவிடும்படியாக வேறு யாரிடத்திலாவது ஒப்புவித்தாயோ! பலே! யாரிடம் ஒப்புவித்தாய். அங்கே போவோம்வா, விசாரிப்போம், எழுந்திரு, தாமதஞ் செய்யாதே" என்று மிகுந்த பரபரப்புடன் அரசன் கதறினன்.

ஹார்பகஸ்.—"ஏனிந்த ஸமாசாரத்தைத்தான் அரசனிடம் சொன்னேம்" என்று வருந்த ஆரம்பித்தான். "ஸ்வாமி! என்னைமன்னிக்கவேண்டும். தங்களுடைய உத்திரவை அநாதரம் செய்ய எனக்குத் தைர்யமில்லை. குழந்தை இறந்து போயிற்று. அதில் ஸந்தேஹமில்லை, ஆகையால் நாம் ஓரிடத்திற்கும்

போகவேண்டிய அவசியமில்லை. என்று மிகுந்த பயத்துடன் ஹார்பகஸ் சொன்னான்.

அரசன்.—"அதெப்படியிருந்தாலும் இருக்கட்டும். நீ யாரிடம் குழந்தையை யொப்புவித்தாயோ அவனுடைய முகத்திலிருந்து அந்தக் குழந்தையின் கதியென்ன வாயிற்றென்று அறிந்தாலொழிய என் மனம் ஸமாதானமடையாது. அது யார்? யாரிடம் குழந்தையை யொப்புவித்தாய்? அதைச்சொல்லு" என்று கேட்டான்.

ஹார்பகஸ்.--நடந்ததனைத்தையும் ஸவிஸ்தாரமாய் எடுத்துரைத்தான். பிறகு ஹார்பகஸ் அரசனிடம் விடைபெற்றுச் சென்றான். அப்பொழுது அரசன் இடையனைத் தன்னிடம் அனுப்பும்படி ஹார்பகஸ்ஸினிடம் சொன்னான். "அப்படியே" என்று பதிலளித்து ஹார்பகஸ் வெளியே சென்றான்.

அரசன் உள்ளே உட்கார்ந்தபடி உறுமிக்கொண்டிருந்தான்.

சற்றுநேரத்திற்கெல்லாம் ஸைரஸ்ஸை எடுத்து வளர்த்த இடையன் அரசன் முன்னிலையில் தோன்றினான். அரசன் வெகு கடுகடுப்பாக இருந்ததை நோக்கி அவன் பயந்தானெனினும், குழந்தை பிழைத்திருக்காதா வென்று கவலையுடனிருந்த அரசனுக்கு ஸந்தோஷ ஸமாசாரம் சொல்லப்போகிறோம் என்ற எண்ணத்தால், கவலையடையவில்லை. ஸைரஸ் என்பவனுடைய தகப்பனே தன் முன்னிலையில் தோன்றவும் அரசனுக்கு கொஞ்சமிருந்த ஸந்தேஹமும் தெளிந்

தது. இடையனை நோக்கி, அரசன் "சுமார் பத்து வருஷங்களுக்குமுன் ஹார்பகஸ் உன்னிடம் கொண்டு வந்து கொன்றுவிடும்படி கொடுத்த குழந்தையை என்ன செய்தாய்? உண்மையைச்சொல். பொய் பேசும் பக்ஷத்தில் உன்தலை போய்விடும், ஜாக்ரதை," என்றான்.

இடையன் வணங்கி "ஸ்வாமி—ராஜ ஸந்நிதியில் பொய் பேசப்போகுமா? ஸத்யத்தையே சொல்லுகிறேன். கேளுங்கள்" என்று ஆரம்பித்து நடந்த விஷயமனைத்தையும் ஒன்றும் விடாமல் அரசனிடம் சொல்லிவிட்டான்.

அரசன்.— "அப்படியானால், இப்பொழுது அரண்மனையிலேயே இருக்கட்டும் என்று நான் தவக்கி வைத்துக்கொண்ட ஸைரஸ் என்னும் பையன் மண்டனையின் குமாரனல்லவா?

"ஆம்"

"இதே பையனைத்தானே ஹார்பகஸ் உன்னிடம் கொண்டுவந்து ஒப்புவித்தது?

"ஆம்"

"ஸந்தேஹமில்லையே?"

"இல்லை"

"உன்னை நம்பலாமா?"

"தங்களிடம் அபத்தம் பேசுவேனா?"

"சரி நீ போகலாம்"

இடையன் அவ்வறையை விட்டு நீங்கினான். அரசன் எழுந்திருக்கவில்லை, அரைமணிநேரம் ஏதோ

யோசனையில் ஆழ்ந்திருந்தான். பிறகு தூங்கி யெழுந்தவன்போல் திடுக்கிட்டெழுந்து "யாரங்கே" என்று கூவினான். ஒரு ஸேவகன் கைகட்டி வாய் புதைத்துக்கொண்டு வந்து நின்றான். "உடனே ஹார்பகஸ்ஸை இவ்விடம் வரும்படி ஏற்பாடு செய்" என்று அரசன் ஆக்ஞாபித்தான். ஸேவகன் "ஆணை" என்று சொல்லி வெளியே ஓடினான்.

சற்று நேரத்திற்கெல்லாம் ஹார்பகஸ் மறுபடியும் அரசனிருந்த அறைக்குள் வந்தான். அரசன் அவனை சிரித்த முகத்தோடு அழைத்து தன்னருகில் உட்காரவைத்தான். "ஹார்பகஸ், நல்ல வேளையாய் மண்டனையின் குழந்தை உயிரோடிருக்கிறது. இன்றைக்கு ராஜஸபையில் வ்யவஹாரம் செய்த குழந்தைதான் மண்டனையின் குமாரனும். நீ செய்த உபகாரத்திற்காக உனக்கு நிரம்பவந்தனம் செய்கின்றேன்." என்றான் அரசன்.

ஹார்பகஸ்.—"அரசன்! குழந்தை பிழைத்தது என்னாலல்ல, அதற்குக் காரணம் இடையனே. ஆகையினால் தங்கள் வந்தனங்கள் அவ்விடையனுக்கே உரியன."

அரசன்.—இருந்தாலும் நீயே கொன்றிருந்தால் இடையன் என்ன செய்யக்கூடும்? ந்யாயமாகப்பேசினால், குழந்தையை நாம் கொல்லக்கூடாதென்று உனக்கு தோற்றும்படி செய்த விதிபரிபாகத்தைக் கொண்டாடவேண்டும். அது கிடக்கட்டும், ஹார்பகஸ் நான் அந்தக் குழந்தையை அரண்மனையிலேயே வைத்

துக்கொள்வதாகத் தீர்மானித்திருக்கிறேன். அந்தக் குழந்தையோடு விளையாடும்படியாய் உன்னுடைய குமாரனையும் அரண்மனைக்கு அனுப்பிவை, எனக்கு நேரமாகிறது. வேறுகார்யங்கள் இருக்கின்றன.'' என்று எழுந்திருக்க வித்தமானுன்.

ஹார்பகஸ். "தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று'' என்று களித்து புறப்படுந்தருவாயிலிருந்தான். அரசன் ஏதோ சொல்ல மறந்தவன் போல் ஹார்பகஸ் பக்கமாகத்திரும்பி "ஹார்பகஸ், இக்குழந்தை பிழைத்த ஸந்தோஷத்திற்காக, சில ஸ்நேகிதர்களை யழைத்து இன்றிரவு விருந்தளிப்பதாக உத்தேசித்திருக்கிறேன், நீயும் கட்டாயம் வந்து சேரவேண்டும்'' என்று அழைத்துவிட்டு, அரசன் வெளியே புறப்பட்டான். ஹார்பகஸ் அரசனை பின் தொடர்ந்தான். பிறகு இருவரும் பிரிந்தார்கள்.

---

# CHAPTER 4.

---

ஹார்பகஸ் வீடு சேர்ந்ததும் நடந்த ஸமாசார மனைத்தையும் தன் மனைவியுடன் சொல்லி, ராஜகுமாரனோடு சேர்ந்திருக்க குழந்தையையும் அனுப்பும்படி அரசன் ஆக்ஞாபித்திருக்கிறான் என்னலும், அவளும் மிகவும் ஸந்தோஷித்து, "ப்ரபுசித்தம் கனபித்தம்" என்பார்கள். ஆகையால் தாமதமன்னியில் அரசனுடைய சித்தம் மாறுவதற்குள் குழந்தையை அரண்மனைக் கனுப்பிவைக்க வேண்டுமென்றாள். ஹார்பகஸ் அப்படி வீட்டு ஸேவகன் ஒருவனை விட்டுக் குழந்தையை யரண்மனைக்குக் கொண்டுபோய் விடச் சொன்னான்.

அதற்குப் பிறகு ஹார்பகஸ் இந்த விஷயத்தைப் பற்றி நினைக்கவேயில்லை. ராத்திரி ஸுமார் 8-மணியிருக்கும், அரசன் விருந்திற்குத் தன்னை யழைத்திருந்த ஞாபகம் வந்தது; உடனே தன்னுடைய உடைகளைக் களைந்து, நூதனமான உடைதரித்துத் தன் மனைவியுடன் விடைபெற்றுக்கொண்டு, அரண்மனைக்குச் சென்றான்.

அன்றிரவு ஹார்பகஸ் உள்பட அத்தேசத்திலுள்ள முக்கியப் பிரபுக்கள் சிலருக்கென்று அரசன் ஏற்பாடு செய்திருந்த விருந்தின் விமரிசை யாவராலும் புகழ்ந்துரைபெற்று முடியக்கூடியதல்ல: எங்கும்

ஒரே கோலாகலமாக விருந்தது. அரண்மனை வாச லில் வண்டிகள் வந்து நின்ற மணியந்தான். வந்த விருந்தினர்களை எதிர்கொண்டழைத்து உபசரிப்பதற் காக நியமிக்கப்பட்ட ராஜஸேவகர்கள் இங்குமங்கு மாய் ஓடித்திரிந்தார். வந்தப் பிரபுக்கள் தனித்தனி யாய்க் கூட்டங்கூடி வேடிக்கையும் விநோதமுமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். ஸகலமும் தயாராக விருந்ததாகத் தோன்றிற்று. அவர்களோடு ஸம மாக உட்கார்ந்து உண்ணுவதாக வாக்களித் திருந்த படி, அரசன் வராததுதான் விருந்து சாப்பாடு ஆரம் பிக்கப் படாததற்குக் காரணம் என்று புலப்பட்டது.

வந்த ப்ரபுக்கள், அங்குள்ளவர்களை அரசன் இன் னும் வாராததற்குக் காரணமென்னவென்று வினவ அங்குள்ளோர், "அரசன் புறப்படுகிற ஸமயத்தில் ஹார்பகஸ் அரண்மனைக்குள் வந்தார். பிறகு இரண்டு பெயருமாக அந்தரங்க அறைக்குள் சென்றனர். அவ் விடத்திலிருந்து இன்னும் வெளியே வரவில்லை. இவ்வளவுதான் நாங்கள் அறிவோம் என்றனர்.

பிரபுக்கள் "ஹார்பகஸ்ஸோடு இந்த ஸமயம் இவ் வளவு அந்தரங்கமாய் இவ்வளவுநேரம் அரசன் பேசு வதற்கு என்ன அவஸரமான கார்யமிருக்கக் கூடு மென்று ஆலோசித்துக்கொண்டிருக்கும் பொழுதே, ஹார்பகஸ் பின்தொடர அரசன் அவர்கள் முன் தோன்றினான். பிரபுக்களெல்லோரும் எழுந்து நின்று மரியாதை செய்தனர். அரசன் அவர்கள் புறமாய்த் திரும்பி புன்முறுவல் செய்துகொண்டே

அந்த ஹாலின் வழியாக நெடுக நடந்தான். பிரபுக்கள் அரசன் பின்புறமாக ஒன்றுகூடித் தொடர்ந்தார்கள்.

அரசன் ஹார்பகஸ் என்பவருடைய கையைப் பிடித்துக்கொண்டு "நாம் சொல்லியனுப்பித்திருந்தபடி எல்லாப்பிரபுக்களும் விருந்திற்கு வந்துவிட்டாற் போலிருக்கிறதே! நிரம்ப சந்தோஷம்! பிரபுக்களே உங்களுக் கெல்லாம் நிரம்புக் கடமைப் பட்டிருக்கிறேன். ஹார்பகஸ்! விருந்தாரம்பிக்கப்படலாமே?" என்றான்.

அரசனுடைய முகத்தில் ஸந்தோஷக்குறிகள் ஜ்வலித்தன. ஆனாலவை இனிமையாகவில்லை. பயங்கரமாக விருந்தன. ஹார்பகஸ்ஸோடு வெகு அன்பாய்ப்பேசினான். ஆனாலது நிஜமான அன்பின் பெருக்கத்தாலன்று என்று இரண்டொரு புத்தி யூஹிகளான ப்ரபுக்கள் தெரிந்துகொண்டார்கள். அன்று நடந்த விருந்தை ஹார்பகஸ் ப்ரபுக்களை யுத்தேசித்து நடத்திவைத்ததாக அரசன் வ்யவஹரித்தானேயன்றி, தன்னுடைய ப்ரயத்நமாக அதைப் பேசவேயில்லை. வெகு ஸந்தோஷமாகவும் ஸரஸமாகவும் மற்றவர்களுடன் நடந்துகொள்ள ப்ரயாஸைப்பட்டான். ஆனால் அவன் கண்களில்மட்டும் ஏதோ இன்னதென்று வர்ணிக்கமுடியாத ஒரு பயங்கரமான ஒளிமட்டும் ஒவ்வொரு ஸமயங்களில் வெளிவந்தது. அதே ஸமயத்தில் அவனுடைய முகமும் குவிந்து காணப்பட்டது.

அரசனுடைய மனதில் எதுவும் வித்யாஸம் இருப்பதாக ஹார்பகஸ்ஸுக்குத் தோன்றவில்லை.

வெகு நாளாய் அவன் ஹ்ருதயத்தில் பாரமாக நின்ற ஒரு பச்சாத்தாபம் அன்று விலகினதால், அரசன் மனம் லகுத்தன்மையை யடைந்து, ஸந்தோஷமாய் பரிணமிக்கிறதென்று ஸமாதானம் செய்து கொண்டான் ஹார்பகஸ். எப்பொழுது மிருப்பதைக் காட்டிலும் அன்றைக்குத் தன்னிடம், அரசன் அளவிற்கு மிஞ்சிப் பிரியமாக விருப்பதாக ஹார்பகஸ் அறியாமற் போகவில்லை. இருந்தாலும், ஸைரஸ் பிழைப்பதற்குத் தான் காரணமாயிருந்தமை பற்றி அரசனுக்குத் தன்னிடத்தில் இப்பொழுது நூதனமாய் உண்டாயிருக்கும் பிரியத்தின் பெருக்கு அது என்றும் அவன் ஸமாதானம் செய்துகொண்டான்.

இப்படிக்கெல்லாம் இருந்தபோதிலும் ஹார்பகஸ் மனம் ஸமாதானம் அடையவில்லை. "நம்முடைய மனம் அதிகமும் ஸந்தோஷிக்க வேண்டியதிருக்க, வர வர இது துக்கத்தில் மூழ்குவானேன்?" என்று அடிக்கடி கேட்டுக்கொண்டான் தன்னையே. ஆனால் ஸமாதானம் மட்டும் ஒன்றும் தோன்றவில்லை. அவன் மனதில் வரவர இருள் அதிகரித்தது; அந்த துக்கத்தை விலக்கிக்கொள்ள எவ்வளவு முயன்றும் அவனால் முடியவில்லை. விலக்கப் பிரயத்தினப்பட்ட விடத்துச் சற்று, விலகி மறுபடியொன்று கூடும் பாசி, ஜலத்தை யாக்ரமித்து மறைப்பதுபோல், திரும்பத் திரும்ப அவன் மனதில் துக்கம்வந்து சூழ்ந்தது. எல்லோரோடும் சிரிக்கவேண்டுமென்று பார்ப்பான். அவனால் சிரிக்க முடிவதில்லை. 'தமாஷாகப்' பேசவேண்டு

மென்று நினைப்பான். நாக்கு வாயின் மேல்மண்ட பத்தோடு ஒட்டிக்கொள்ளும். இப்படி நரகாவஸ்தையி லிருந்தான் ஹார்பகஸ்.

நேரம் வெகுவாயிற்று. அரசன் தயார் செய்து வைத்திருக்கும் விருந்திற்குரிய உணவுப்பொருள்கள் சூடுமாறுகின்றன. ஆறிவிட்டால் அஸ்டியாகஸ் நம் மைக் கொன்றுவிடுவான். ஆகையால் விருந்தை கவனிப்போம்.

அப்புறம் ஒரு ஹாலில் நடுவில் ஒரு மேஜையும் அதைச் சுற்றிலும் பல ஆஸநங்களும் போடப்பட்டி ருந்தன. அவைகளுள் இரண்டு மிகவும் வேலைப்பா டுடையனவாய்க் காணப்பட்டன. அதிலொன்று ஸிம் மாஸநம். மற்றொன்று ஸிம்மாஸநத்திற்கு வலதுபுற மாய் போடப்பட்டிருந்தது. அந்த ஹாலிற்குள் நுழையும்போதே அரசன் ஹார்பகஸ் கையைப் பிடித்து இட்டுக்கொண்டுபோய் தனக்கு வலதுபுற மிருந்த ஆஸநத்திலுட்காரவைத்தான். ஹார்பகஸ் ஸின் மனதிருந்த நிலமைதான் நமக்குத் தெரியுமே. இப்பொழுது அவனுக்கு ப்ரமை ஜாஸ்தியாயிற்று. இந்த ஸம்பவங்களெல்லாம் உண்மையாகவே நடக்கின் றனவா? அல்லது எல்லாம் ஸ்வப்நமா? என்று கூட ஸந்தேஹித்தான். ஏனெனில் அரசனுக்கு வலது புறம் போடப்பட்டிருக்கும் ஆஸநம் எப்பொழுதும் கண்யதைக் குரியது. அநேகமாய் அரசனோடு ஸம அந்தஸ்துள்ளவர் தவிர வேறொருவரும் அதில் உட் காரவைக்கப் படுவதில்லை. மற்ற ப்ரபுக்களும் வரிசை

க்ரமப்படி அவரவர்க்குரிய ஆஸநங்களில் உட்கார்ந்தனர்.

அரசனும் பிரபுக்களும் விருந்திற்குட்காரவே புறப்பட்டு விட்டது. சமையல் கார ஸைந்யம். அங்கு வந்திருந்த ப்ரபுக்கள் ஒவ்வொருவருக்கும் இவ்விரண்டு பேர் வீதம் பாகிக்கலாம் அங்கிருந்த சமையர்காரர்களை. பலவிதமான போஜன பதார்த்தங்களை அநேகம் வெள்ளி தட்டுகளிலேந்தி அவர்கள் ப்ரபுக்கள் முன்னிலையில் மேஜையின்பேரில் சத்தமின்றி வைத்தார்கள். அவர்கள் நடப்பதனால் ஒருதுளி சப்தங்கூட வெளியே கேட்கவில்லை. அரசன் ஸம்பாஷணையைத்துவக்கு முன்னர் பேசுவதற்கு தைர்யமில்லாதவர்களாய் எல்லா ப்ரபுக்களும் அரசன் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

போஜநபதார்த்தங்கள் முற்றிலும் கொண்டுவந்து அவர்கள்முன் வைக்கப்படும்வரையில் அரசன் ஒன்றும் பேசவேயில்லை. பிறகு அரசன் "ப்ரபுக்களே! இன்றையதினம் நான் விருந்தளித்தது இன்ன காரணம் பற்றி என்று உங்களுக்குத் தெரியாதது ஒரு ஆச்சர்யமன்று. அதன் காரணம் முற்றிலும் நானொருவனே அறிவேன். ஹார்பகஸ் ஒருவாறு அறிவார். ஆனால் இப்பொழுது அதன் காரணத்தை வ்யக்தமாய் நானுங்களுக்குச் சொல்லப்போகிறதில்லை. ஏனெனில், அப்படிச் செய்ய ஆரம்பித்தால் சில பெயர் ஊர்கள் வெளியே செல்லும்படியாகவரும், அதில் எனக்கிஷ்டமில்லை. இருந்தாலும் உங்களுக்கு ஒன்றுமே தெரியா

மல் மறைத்து, விருந்துமட்டும் ஸாப்பிட்டுப்போங்கள் என்று சொல்வது அலௌகிகம் என்று எண்ணுகிறேன். என்ன ஹார்பகஸ்?" என்று சொல்லி ஹார்பகஸ் புறமாய் அஸ்டியாகஸ் திரும்பினான்.

"ஆம்! ஊ, ஊ, ப்ரபு சித்தம்" என்று உளறினான் ஹார்பகஸ்.

"அந்தமட்டில் சொல்லுவதுகூட ஹார்பகஸ் ஸுக்கு ஸம்மதமில்லைபோலிருக்கிறது. ஸரி! அப்படியே யாகட்டும். ப்ரபுக்களே! எதிர்பாராதவொரு லாபம் இன்று எனக்குக் கிடைத்தது. அந்த லாபத்தின் பெருமையை ஒருவராலும் மதிக்கமுடியாது, என் ஹார்பகஸ்?"

ஹார்பகஸ் இவ்விதம் எதிர்பார்க்கவேயில்லை. தனக்கு அரசன் அன்று செய்யும் மரியாதைகளெல்லாம் அபூதமாய் அவனுக்குத் தோன்றிற்று. அடிக்கடி தன்னை ஸந்தேஹங் கேட்பது அவனுக்குத் திகிலை உண்டாக்கிற்று. ஸ்வபாவத்திலேயே அவனுக்கு வயிற்றில் ஒரு ஸங்கடம் உண்டாகி நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகமாகிக்கொண்டே வந்தது. என்னமோ சொல்ல வந்தான். பேச நாவெழவில்லை. அரசன் இதைக் கவனிக்காதவன்போலே மேலே பேச ஆரம்பித்தான்.

"ப்ரபுக்களே! இன்ன கார்யமென்று நான் சொல்லாமலிருக்கும்போதே, என்னுடைய வார்த்தைகளை ஸந்மானித்து, இந்த விருந்திற்கு நீங்களனைவரும் வந்ததற்காக மறுபடி அநேக வந்தனம் செய்கிறேன்" என்று முடித்தான்.

அங்கு வந்திருந்த ப்ரபுக்களி லொருவர் "ஸ்வாமி! நீங்கள் சொல்லுவது மிகவும் விந்தையாயிருக்கிறது! காரணம் விசாரிக்கிறது எங்களைச்சேர்ந்ததல்லவே! ராஜாக்ஞை யென்பதொன்றே நாங்கள் கவனிக்க வேண்டியது. லாப நஷ்டங்கள் கவனிக்கக்கூடத் தாமதிக்கலாகாது ராஜாக்ஞை யேற்பட்டபிறகு" என்று அரசன் சொன்ன உபசார வார்த்தைகளுக்குக் குறிப்பாய்ப் பதிலுரைத்தான்.

அரசன் முகத்திலொரு புன் முறுவல் காணப்பட்டது. "இவ்வளவு பக்தி நீங்கள் என்னிடம் வைத்திருப்பதற்காக உங்களுக்கு மறுபடியும் நிரம்ப வந்தனம்" என்று சிரித்துக்கொண்டே அரசன் சொன்னான்.

மற்ற ப்ரபுக்களெல்லாரும் சும்மாவிருந்தார்கள். அரசன் மறுபடி யாரம்பித்தான். "பிரபுக்களே! நான் சொல்லும் வார்த்தைகள் கேவலம் ஔபசாரிகமாக உங்களுக்குத் தோன்றுகிறாற்போலிருக்கிறது. ஆனால் ராஜபக்தி விச்வாஸங்கள் நிறைந்த உங்களுக்கு வேறு விதம் மனிதன் இருக்கமுடியாதென்று தோன்றுகிறது. அது ந்யாயமே. அப்படித் தோன்றுமானால் நான் சொல்லுவதும் உபசார வார்த்தைகளாகத்தான் தோன்றும். ஆனால் இன்னொரு புறமாய் யோசிப்பீர்களானால் அதன் விஷயம் உங்களுக்குப் புலப்படும். உங்களைப் போல் எல்லோருமிருக்கமாட்டார்கள். ராஜபக்தியில்லாமல் உலகத்தில் எவ்வளவு பெயர்கள் இருக்கிறார்கள் என்று எப்பொழுதாவது யோசித்திருப்பீர்களா?"

"நாங்கள் யோசித்திருக்கிறோம். ஆனால் ராஜ பக்தியில்லாதவர் இருக்கக்கூடுமென்றுமட்டும் எங்களுக்குத் தோன்றவில்லை. ஆனாலதில் இரண்டுவிதமுண்டு என்பதை ஒப்புக்கொள்ள முடியாது. நிஜமான ராஜபக்தி போலி ராஜபக்தி என. போலி ராஜபக்தி உடையவர்கள் ராஜாக்ஞைக்கு பயந்துஅதனையுடையவர் போல் பாசாங்குசெய்வார்கள். மற்றவர்களுக்கு ராஜ பக்தி உடன்பிறப்பாகவே வருகிறது; அவர்களுடைய ரக்தத்துடன் தந்மயமாகிறது. முடிவில்போலியாகவோ, நிஜமாகவோ ராஜபக்தி யில்லாதவர்கள் என்று இருக்க முடியாதென்பதே எனது அபிப்பிராயம். அவர்கள் மனதிலென்ன எண்ணியிருப்பார்கள் என்பது மனித சரீரம் எடுத்தவர்கள் விசாரிக்கவேண்டியதன்று. அதை விசாரிக்கத் தகுந்த அறிவும் சக்தியும் வாய்ந்தவர் கடவுள் ஒருவரே," என்று விஸ்தாரமாய் பதிலுரைத்தான்.

அரசன் அதைக்கேட்டு, சிரித்துக்கொண்டு அப்பொழுது பேசி முடித்த ப்ரபுவைப் பார்த்து, "ப்ரபு! இப்பொழுது நீங்கள் சொல்லும் வார்த்தைதான் உபசாரவார்த்தை. ஏனெனில் அவ்விதம் ராஜபக்தியில்லாதவர்களு மிருக்கிறார்கள் என்று எனக்கே தெரியும். அரசனுடைய ஆணையைத் தடையின்றி செய்துமுடிப்பது எவ்வளவு ஸுலபமோ அவ்வளவு ஸுலபமல்லவா பூரண நம்பிக்கை வைத்திருக்கும் அரசனிடம் "தங்கள் ஆணைப்படி செய்தாயிற்று" என்று சொல்லி அவனை ஏமாற்றிவிடுவது?"

இப்படி அரசன் சொன்னதும் ஹார்பகஸ் சரீரம் நடுக்கிட்டது. ஆனாலதை அரசனைத்தவிர வேறொரு வரும் கவனிக்கவில்லை. ஆனால் அந்த ஸமயம் அரசன் ஹார்பகஸ்ஸை நோக்கின நோக்கு "பயப்படாதே! நான் சொல்வது உன்னைக் குறித்தல்ல," என்று தைரியம் சொல்லுவதுபோலிருந்தது. ஆனால் ஹார்பகஸ் ஸின் வயிற்று ஸங்கடம் மாறவேயில்லை. அவனுக்கு ஆஹாரத்திலும் புத்திநாடவில்லை. முகம் வெளுத்துப் பால்போலாகிவிட்டது. அரசன் அதைக் கவனித்துச் சொல்லலானான். "ஹார்பகஸ்! என்ன விசேஷம்! ஏனொருமாதிரியாக விருக்கிறாய்! என்ன ஒன்றும் ஆஹாரமே செய்யக்காணோம்! உடம்பு ஸௌகர்ய மில்லையோ!" என்று வினவினான் அரசன்.

ஹார்பகஸ் "மகாராஜாவே! உடம்பு ஸௌகர்ய மில்லாமலு மில்லை. மனதில் இன்னதென்று சொல்லக் கூடியதாக எவ்விதகவலையு மிருப்பதாகவும் காணோம். மனம்மட்டும் கவலையுறுகிறது. என்னை மன்னிக்க வேண்டும்" என்றனன்.

அரசன் கவலைப்பட வேண்டாமென்று, அவனுக் குத் தேறுதல் சொல்லி, அவன் முன்னிலையில் வைக் கப்பட்டிருந்த தட்டிலிருந்து சிறிது ஆஹாரம் எடுத்துச் சாப்பிடும்படி கட்டாயப் படுத்தினான். அப்படியே ஹார்பகஸ்ஸும் தன் மனதிற்கு எவ்வளவு அருவருப்பா யிருந்தாலும் அரசனை ஸந்தோஷப் படுத்தவேண்டிய தற்கு சிறிது சிறிதாய் அவ்வுணவை ருசிபார்த்துக் கொண்டிருந்தான். பிறகு அரசன் ப்ரபுக்களை நோக்கி,

"ஆம் ராஜபக்தி விஷயமாகவல்லவோ பேசிக்கொண் டிருந்தோம். நான் கேட்டகேள்விக்கு என்ன ஸமா தானம் சொல்லுவீர்" என்று நின்றுபோன ஸம்பாஷ ணையை யாரம்பித்தான்.

"அரசனிட்ட கட்டளைப்படி நடக்காத பாவத் தோடு அரசனை ஏமாற்றும் துரோஹ சிந்தனையுடைய வர்கள் இருப்பது அஸாத்தியமென்று என் புத்தியில் படுகிறது" என்று முன்னமேயே பேசின ப்ரபு பதில் மொழிந்தார்.

அவர் சொன்ன ஸமாதானம் அரசனுக்கு யுக்த மாகப்படவில்லை. "ஸரி. அப்படியே வைத்துக்கொள் வோம். ஆனால் நான்சொல்லுகிறமாதிரி மனிதர்கள் இருப்பது வெகு சஹஜமென்று நான் எண்ணுகிறேன். என்னுடைய ரஹஸ்யங்களை யெல்லாம் அறிந்த இவரும் (ஹார்பகஸ்ஸைச் சுட்டிக்காட்டி) நான் சொல்வது ஸரி யென்று ஆமோதிப்பார். அந்த வ்யவஹாரம் ஒரு புற மிருக்கட்டும். அப்படிப்பட்ட த்ரோஹி யொரு வன் இருக்கக் கூடுமென்று வைத்துக் கோள்வோம். அவனுக்கு என்ன தண்டனை விதித்தால் குற்றத்திற் கேற்றதாக விருக்குமென்று எண்ணுகிறீர்கள்" என்று அரசன் கேட்டான்.

ஹார்பகஸ் முகம் வர்ணிக்கமுடியாதபடி வாட்ட மடைந்தது. ஸம்பாஷணையின் கதியும் ப்ரபுக்களுக்கு த்ருப்தியாகவில்லை. ஆனால் யாரென்ன செய்யலாம்? அரசனன்றோ ஸம்பாஷணையை யாரம்பித்து நடத்தி வருகிறான்.

"அப்படிப்பட்டவனை சித்திரவதை செய்ய வேண்டுமென்றார்" ஒரு ப்ரபு. "வெளிச்சமேயில்லாத ஓரிருட்டறையில் ஜன்மத் தீர்ப்பாய் அடைத்து விடவேண்டுமென்றார் மற்றொரு ப்ரபு." தினந்தோறும் நான்கு ரஸ்தாக்கள் சேரும் "ஷகரில்" அவனைக் கொண்டுவந்து நிறுத்திக் கசையடி யடிக்கவேண்டுமென்றார் மூன்றாவது ப்ரபு. "அப்படிப்பட்டவன் கண்களைப் பிடுங்கவேண்டுமென்றார்" இன்னொரு ப்ரபு. இப்படி பலவிதமான தண்டனைகளைப் பலபேர்கள் உசிதமென்று அரசனுக்கு எடுத்துக் காட்டினர். அரசனுக்கு அவைகள் ஒன்றிலும் ஸமாதானமில்லை யென்று தோன்றிற்று. ஹார்பகஸ் ஒன்றும் பேசவேயில்லை.

"என்ன! ஹார்பகஸ். நீ யொன்றும் சொல்லக் காணோமே! இந்தக் கவலைகளை யெல்லாம் விட்டொழி. இரண்டொரு நாழிகை ஸந்தோஷமாகப் பொழுது போக்குவோமென்றால், அந்த ஸமயத்தில், முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறாயே! வேடிக்கை தானே! ஹு—உன் அபிப்பிராயம் என்ன சொல்லு கேட்போம். ப்ரபுக்களே! எனக்கொரு நம்பிக்கை. என்னுடைய அபிப்பிராயம் எப்படி யிருக்குமோ அதே மாதிரிதான் ஹார்பகஸ் அபிப்ராயமுமிருக்கு மென்று மட்டும் எனக்கு நிச்சயம். நானிதை யனேக ஸமயங்களில் கவனித்திருக்கிறேன். ஹார்பகஸ் ஊ சொல்லு" என்று த்வரிதப்படுத்தினான்.

ஹார்பகஸ் என்ன செய்வான் பாவம். ஒன்றும் ஓடவில்லை. ஏதாவது பதில் சொல்லித்தீரவேண்டும்.

சொல்லாவிட்டாலோ அரசனுடைய கோபத்திற்குப் பாத்திரமாகவேண்டும். தன்னுலானமட்டும் மனதைத் திடப்படுத்திக்கொண்டு, மகாருஜா! சரீரத்திற்கு மட்டும் தண்டனை இப்படிப்பட்டவர்களுக்குப் போதாது. அவர்கள் மனதும் சரீரம் போலவே நரகா வஸ்தைப் படும்படி செய்ய வேண்டும். இல்லாவிட்டால் அவ்வித தண்டனைகளுக்குக் ரௌர்யம் போதாதென்றே சொல்ல வேண்டும் என்ருன். இவ்வளவு சொல்லத்தான் அவனுக்கு ஸத்வமிருந்தது. சொல்லி முடிந்தவுடன் நாற்காலியில் அப்படியே களைத்துச்சாய்ந்தான். அஸ்டியாகஸ் அவன் பக்கம் திரும்பி "மெதுவாக அவன் முகத்தைத் தடவிக்கொடுத்து, பன்னீர் கொண்டுவரச் சொல்லி சைத்யோபசாரம் செய்து களை தெளியவைத்தான். ஹார்பகஸ் நிமிர்ந்து உட்காரவும் சொல்ல ஆரம்பித்தான்."

"ப்ரபுக்களே! ராஜத்ரோஹியே இருக்கமுடியாதல்லவா! நீங்கள் வ்யவஹரித்தீர்கள். நான் அப்படிப்பட்டவர்களை பார்த்து மிருக்கிறேன். அவர்களைத்தண்டித்து மிருக்கிறேன். ஆனுல் நான் செய்த தண்டனை ஸரியாக ஹார்பகஸ் சொன்ன விதமேதான். அதனுல்தான் இவரிடத்தில் எனக்கொரு விச்வாஸமும். என்ன! சும்மா உட்கார்ந்திருக்கிறீர்களே. ஆஹாரம் செய்யும் விருந்தில் ஸம்பாஷணை ஸாப்பாட்டு ஸுகத்தைக் கெடுக்கலாகாது. ஆயிற்று. நானந்தக் கதையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்."

"ஸுமார் பத்து வருஷங்களுக்கு முன் என்னுடைய க்ஷேமலாபங்களை யுத்தேசித்து ஒரு சிறு குழந்

தையை, அதன் தாய் தந்தையரிடமிருந்து பிரித்துக் கொல்ல வேண்டியது அவசியமாயிருந்தது."

ப்ரபுக்கள் ஒருவரை யொருவர் பார்த்து விழித்தார்கள். அவர்கள் முகத்தில் ஆச்சர்யக்குறிகள் தோன்றின. காரியமில்லாமல் இந்தத்ததியில் ஸம்பாஷணையை அரசன் துவக்கவில்லை என்றிப்பொழுது தான் அவர்கள் மனதில்பட்டது. இது யாருக்கு என்ன அநர்த்தமோ! என்று அவர்கள் விழித்தனர். அரசன் அவர்கள் எல்லோரையு மொருமுறை திரும்பி பார்த்து விட்டு மறுபடி தொடங்கினான்.

"ஆனால் யார்! என்ன! ஏது! முதலியகேள்விகள் கேட்கவேண்டாம். ஏதோ எனக்கு தோன்றிய சில காரணங்களால் அவ்விதம் செய்ய வேண்டியது அவசியமென்று முடிவிற்கு வந்தேன். உடனே எனக்கு நிரம்ப நம்பிக்கைக்குப் பாத்ரமான ஒரு ப்ரபுவை யழைத்து எனனுடைய மனதிலிருப்பதை வெளியிட்டு, அவ்விதம் செய்தால் அவரை பரமோபகாரியாய் நினைப்பேன் என்று ப்ரார்த்தித்துக் கேட்டுக்கொண்டேன். அவரும் அப்படியேயாகட்டு மென்று ஒப்புக்கொண்டுபோய், மூன்று நாட்களுக் கெல்லாம் திரும்பிவந்து, அக்குழந்தையைக் கொன்றுயிற்றென்று என்னிடம் நம்பிக்கையாகச்சொன்னார். நானும் அதை நம்பியிருந்தேன்."

கதை இவ்வளவிற்கு வந்தவுடன் 'அரசன் வெடிவைப்பது நமக்காகத்தான் என்று தெரிந்து கொண்டானெனினும், அன்று முழுவதும் தன்னிடத்தில் கோபஜாடையே காண்பிக்காததால், ஒரு வேளை வேறு ஸம்பந்தமாயிருக்கலாகாதா' என்று ஹார்பகஸ் எதிர்பார்

த்து "என்னவருவதானுலும் நாமே தான் அனுபவிக்க வேண்டும். ஆகையால் நம்மால் கூடிய அளவு நம்மையே நாம் வெளிக்காட்டிக் கொள்ளாமலிருந்து பார்ப்போ மென்று தீர்மானித்து மனதைத்திடப் படுத்திக் கொண்டு, ஆஸநத்தில் அழுந்தியுட்கார்ந்தான். அரசன் இவைகளையெல்லாம் கவனிக்காமல் போகவில்லை. பாவ சாஸ்த்ரத்தில் பூராவ்யுத்பத்தி அரசனுக்கு.

"பத்து வருஷங்கள் சென்றன. எனக்கிந்த ஸமாசாரமும் மறந்து போயிற்று. இந்த ஸமயத்தில் தற்செயலாய் நான் கொல்லும்படி உத்தரவளித்த குழந்தை பத்துவயது பாலகனுய் வளர்ந்து வருகிறுனென்ற செய்தி என்காதிற் கெட்டியது. அதைத் துப்புப்பிடித்து விசாரிக்குமளவில், அந்த ப்ரபு குழந்தையைக் கொல்லத் துணியாமல், ஒரு இடையனிடம் கொலை செய்து வரும்படி கொடுத்ததாகவும், அவனும் அதைக்கொல்ல மனந் துணியாமல் இறந்துபோன தன்னுடைய குழந்தையைக்காட்டி, அப்பிரபுவை யேமாற்றி விட்டதாகவும் கேள்விப்பட்டேன். அந்தப்ரபுவையும் விசாரித்ததில் அவர் ஸம்பந்த பட்டமட்டில் நான் கேள்விப்பட்டதனைத்தும் நிஜமென்று ஒப்புக்கொண்டார்."

"ஹா!" என்று ஒரே மூச்சாய் எல்லா ப்ரபுக்களும் ஆச்சர்யப்பட்டார்கள். ஹார்பகஸ் மட்டும் தன் கையால் இரண்டு பொட்டுகளையும் பிடித்துக்கொண்டு நாற்காலியில் சாய்ந்தான்.

அரசன் ஆரம்பித்தான். "ஆனுல் இவருடைய அபிப்ராயம் குழந்தையை பிழைக்கவிடவேண்டுமென்பதல்ல. குழந்தை யிறந்தது என்று உண்மையிலேயே

அவர் நம்பியிருந்தார். ஆனால் இவர்பேரில் குற்ற மெல்லாங்கூடி, ராஜாக்ஞையைத் தானே நிறைவேற்றா மல் அல்லது தன் முன்னிலையில் நிறைவேற்றுவிக்காமல் இதர மனிதரை நம்பினதுதான். அந்தக் குழந்தை மறு படி என்னுடைய அரண்மனையிலேயே ஏற்றுக்கொள்ளப் பட்டது. பாருங்கள் காலத்தின் கொடுமையை. அக் குழந்தையுடன் விளையாடுவதற்கு ஸம வயதுள்ள குழந் தை வேண்டுமென்று அதே ப்ரபுவை அவருடைய குழந்தையை யரண்மனைக்கு அனுப்பும்படி வேண்டிக் கொண்டேன். அவரும் அப்படியே செய்தார். அக் குழந்தையை நறுக்கிக் கறிசெய்து தகப்பனுக்கே இடு வித்தேன். அத்தகப்பன்தான் இதோ என் வலது புறத்தில் வீற்றிருக்கும் ஹார்பகஸ்" என்று சொல்லி முடித்தார்.

எலியைத் துறத்திக்கொண்டு போகும்பொழுது பூனையின் கண்களிருப்பதுபோல் அரசன் முகத்தில் க்ரூரமான தீயொளி வீசிற்று. ப்ரபுக்கள் பேசாதிருந் தனர். அவ்வளவு நிச்சப்தமாயிருந்தது. சமையற் காரர்கள் சமையற்கட்டிற்குள் நுழைந்தனர். அந்த ஹாலில் ஒரு குண்டூசி கீழே விழுந்திருக்குமாயின் அச் சத்தம் தெளிவாய்க் கேட்டிருக்கும். அரசன் எழுந் தான். ப்ரபுக்களும் எழுந்தனர். பிறகு யாவரும் கலைந் தார்கள். ஹார்பகஸ் துக்காக்ராந்தனாகத் தள்ளாடித் தள்ளாடி வீடுபோய்ச் சேர்ந்தான். குதூஹலமாய் ஆரம்பித்த ஸாயங்காலம் பயங்கரமாய் முடிந்தது.

---

# CHAPTER 5.

அரசனுடைய சிந்தனை அத்துடன் முடியவில்லை. தன் காலடிக்கே வந்துவிட்டது தனக்கு விரோதியாகப் போகும் குழந்தை. அக்குழந்தையை வதம் செய்து, தன் பெயருக்கும், புகழுக்கும் ஒருவித அபாயமுமில்லாமல் செய்துகொள்ளுவது இப்பொழுதும் ஸாத்யமில்லாமற் போகவில்லை. ஆனால் விதி பரிபாகம் அரசனை வேறுவிதமாய் ஆலோசிக்கச்செய்தது. விதியை விலக்க யாரே வல்லார்?

மறுபடி தைவக்ஞர்களைத் தருவித்தான். அவர்கள் வந்தவுடன் தனக்குப் புதிதாய் நேர்ந்திருக்கும் ஸங்கடத்தைத் தெரிவித்தான். ‘ராஜா விளையாட்டு’ என்பது எப்படி என்று தைவக்ஞர்கள் கேட்டார்கள். அரசன் அதனை அவர்களுக்கு விளங்கவைத்து “தைவக்ஞர்களே! எனக்கொன்று தோன்றுகிறது. நான் கண்ட ஸ்வப்நத்தின் பலன் இப்பையன் அரசனாவானென்றும் என்னையே யதிகாரம் செய்வானென்றும் முன்சொன்னீர்கள். அப்படியே விளையாட்டில் மற்ற பிள்ளைகள் இவனை அரசனாகத் தேர்ந்தெடுத்தார்கள். அவனும் தன்னுடைய (விளையாட்டில்) கிங்கரர்களுக்கு உத்தரவுகளிட்டு, ஸர்வாதிகாரமும் செலுத்திவிட்டான்.

ஒரு ப்ரபுவின் குமாரனை நைய்யப் புடைக்கும்படி உத்திரவிட்டதற்காக குற்றஞ் சாட்டப்பட்டு என் முன்

னிலையில் விசாரணைக்காகக் கொண்டுவரப் பட்டான். என்னையொரு பொருட்டாகவே மதியாமல் பேசினன். அவனுடைய தைர்யம் என் மனதிலும் அச்சத்தை யுண்டுபண்ணியது. ஸபையில் வந்திருந்த அனைவரும் பையனுடைய தைர்யத்தையும் ஸூக்ஷ்ம புத்தியையும், வ்யவஹார ஸாமார்த்தியத்தையும் கண்டு வியந்தார்கள். ஆதலால் இத்துடன் நான் கண்ட ஸ்வப்நத்தின் பலன் முடிவடையுமென்று எண்ணுகிறேன். உங்களுடைய அபிப்பிராயம் எப்படி என்ருன்.

தைவஜ்ஞர்களுக்கும் அரசன் சொல்லுவதனைத் தும் ந்யாயமாகவே புலப்பட்டது. "ஸ்வப்நத்தின் பலன் அநுபவத்திற்கு வந்துவிட்டது. இனி அந்தப் பையனை அவனுடைய தாய்தந்தையரிடம் அனுப்பி விடலாம்" என்று அவர் அபிப்பிராயம் தந்தனர். பிறகு அரசனிடம் விடைபெற்றுச் சென்ருர்கள்.

அரசன் பையனை மண்டனையிடத்து அனுப்பி னன். இறந்துபோயிற்றென்று அவள் எண்ணியிருந்த குழந்தையைத் திரும்ப உயிருடன் காணப்பெற்ற மண்டனையின் ஸந்தோஷத்தை யாரே வர்ணிப்பார். குழந்தை பிழைக்கும்படி நேரிட்டவண்ண மெப்படி யென்று ஸகல வ்ருத்தாந்தத்தையும் சொல்லும்படி யொருவரை அரசன் அனுப்பியிருந்தான். மண்டனை யும் அவள் புருஷனும் அவரைக் கேள்விகள் கேட்டு த்ருப்தியடையவில்லை. அக்கதையைத் திருப்பித்திருப் பிச் சொல்லும்படி கேட்டார்கள்.

இவ்விதம் ஸைரஸ்ஸுக்கும் (அவன் மூலமாய்ப் பத்து வருஷம் கழித்தாகிலும் மண்டனைக்கும் அவள்

புருஷனுக்கும்) நேர்ந்த புது வைபவத்தில் ஸைரஸ் தன்னுடைய செவிலித்தாயையும் அவள் புருஷனையும் மறக்கவில்லை. அவர்களுக்குள்ளும் முக்கியமாய் செவிலித்தாயினிடமே அவனுக்கு மிகுதியும் விச்வாஸம். அவனுடைய உண்மைத் தாய் தந்தையர் குழந்தையை பல கேள்விகள் கேட்டனர். ஆனால் எந்த விஷயத்தை யெடுத்துப் பேசினாலும் தன் செவிலித் தாயான 'ஸைனோ' என்பவளை அதில் ஸம்பந்தப்படுத்திப் புகழாது விடுவதில்லை.

இத்தாய் தந்தையரை உவமைசொல்லுதற்கில்லாத எல்லையற்ற பேரானந்த ஸாகரத்தில் முழுகவிட்டு, அரண்மனையிலிருந்த எல்லையற்ற துக்கத்துடன் வீடுசென்ற ஹார்பகஸ்ஸைப் பின்தொடர்வோம். வழக்கம்போல் அவன் மனைவி அவனுடைய வரவையெதிர்பார்த்து உட்கார்ந்திருந்தாள். அவளுக்கும் மனது சூந்யமாகவேயிருந்தது. இதென்ன காரணமென்று அவளுக்கும் புலப்படவில்லை. வேறுகார்யம் பார்ப்போமென்றாலோ அதுவும் ஓடவில்லை. கடைசியாய் மேல் மெத்தையில் வீதியை நோக்கியிருந்த ஒரு ஜன்னலண்டையில்வந்து, இரண்டு கம்பிகளைப் பிடித்துத்தொங்கிக்கொண்டு, தன் கணவன் வரும் பாதையையே கவனித்துக்கொண்டிருந்தாள்.

அதோ வருகிறான் ஹார்பகஸ். நடைதளர்ந்திருந்தது. நடை அவருடையதுதான் ஸந்தேஹமில்லை. இவ்வளவு மெதுவாய் நடக்கமாட்டாரே! ஒருவேளை வெகுதூரத்தில் வருவதால், வேகமிவ்வளவென்று நிதானிக்க முடியவில்லை. சற்றுநேரம் அதே திசையில்

கண்களைச் செலுத்திபிருந்தாள். ஹார்பகஸ் இன்னும் ஸமீபமாய் வந்தான். நடை தளர்ந்துதானிருந்தது. தள்ளாட்டமுமிருந்ததாகக் காணப்பட்டது. இப்பொழுது ஸந்தேஹமில்லை. தள்ளாடித் தள்ளாடித்தான் நடந்து வருகிறான். இவ்வளவு அசக்தம் நேரிடுவதற்கு என்ன காரணமிருக்கக்கூடும்? அவர் மனைவிக்கு ஹார்பகஸ் முகம் தெரியவில்லை. முகம் தரையை நோக்கின படி இருந்தது. அரசனுடைய கோபத்திற்குப் பாத்ரமாயிருந்திருப்பாரோ? சொல்லிவிட்டுப் போனதைக் காட்டிலும் சீக்கிரமாகத் திரும்பிவிட்டாரே!

இப்படி அநேக மாயிரம் ஸந்தேஹங்களுக்கு அவள் மனம் இரையாயிற்று. நிஜம் எதுவோ அதுமட்டும் அவள் மனதில் உதிக்கவில்லை. எப்படி உதிக்கக்கூடும். இவ்வள்வு பயங்கரமான கார்யம் அரசன்செய்திருக்கக்கூடும் என்று யாரால் முன்னாலேயே ஊஹித்தறியக் கூடும்.

வீட்டிற்கு வெகு ஸமீபமாய் வந்துவிட்டான் ஹார்பகஸ். அவருடைய முகஜாடைகள் மனைவிக்குத் தென்படலாயின. முகம் சற்றுப் பருத்திருந்ததுபோல் காணப்பட்டது. அதிகமாய் அழுதபாவனையாகவும் காணப்பட்டது. அவர்மனைவிக்கு அங்கம் பதறிவிட்டது. உடனே, மெத்தையிலிருந்து கீழே யிறங்கி வாயிற்படிக்கு வந்து சேர்ந்தாள். அவ்விடத்திற்கு ஹார்பகஸ் ஸும் வந்து சேர்ந்தான். மிகுந்த கவலை காட்டிய முகத்தோடு மனைவி "என்ன விசேஷம்" என்று மெதுவாய்க் கேட்டாள். ஹார்பகஸ் நெற்றியில் கையை வைத்துத்

தலை குனிந்தான். கண்களிலிருந்து மளமள வென்று கண்ணீர் உதிர்ந்தது. மனைவி, அவரைத் தாங்கினாற்போல் நடத்தி முன்கட்டிலிருந்த ஒரு கட்டிலிற் கொண்டு போயவரைச் சேர்த்தாள். ஹார்பகஸ் அப்படியே படுக்கையில் சாய்ந்தான். தேம்பித் தேம்பியழ ஆரம்பித்தான்.

"நாதா! ஏன் துக்கப்படுகிறீர்கள்? இன்னதென்று என்னிடம் சொல்லலாகாதா! ஐயோ! என் மனம் எண்ணுவதெல்லாம் எண்ணுகிறதே!" என்று ஹார்பகஸ் மனைவி பக்கத்திலுட்கார்ந்து பரிதபித்தாள்.

சற்று நேரம் ஸ்மரணையற்றவன்போல் ஹார்பகஸ் படுத்திருந்தான். பிறகு திடீரென்று எழுந்துட்கார்ந்தான். பற்களை நறநற வென்று கடித்தான். "இந்தப் பழிக்குப்பழி வாங்காவிட்டால்——; ஐயோ என்னால் என்ன ஆகும்?" என்று பித்துக்கொண்டவன்போல் சொன்னான். மறுபடி படுக்கையில் சாய்ந்தான்.

"நாதா! இப்படி நீங்கள் செய்வது நியாயமில்லை. என்ன துக்கஸமாசாரமாக விருந்தாலும் என்னிடம் சொல்லி, அதைபாகிக்காமலிருப்பது உமக்கு ந்யாயமில்லை. ஐயோ! நாதா? சொல்லுங்கள்" என்று ஹார்பகஸ் மனைவி கண்ணீர் வடித்தாள்.

ஐயோ! கண்மணி! நான் அதை எப்படிவாய் திறந்து சொல்லுவேன்," என்று சொல்லி முடிக்கு முன் துக்கம் முன்னிலும் பதின் மடங்கதிகமாகத்தொண்டையில் வந்தடைத்துக்கொண்டு, அவனை பேச வொட்டாமல் தடுத்தது.

"பிராணநாதா! நீங்கள் துக்கப்படுவதுதான் என்னை நிரம்ப வருத்துகிறது. தெரிந்ததான துக்கம் என்ன நேர்ந்தாலும் நான் அதை ஸஹித்துக் கொள்ளவும் கொள்ளுவேன். உங்களுக்கும் தேறுதல் சொல்லுவேன். ஸ்வாமி! என்னவென்று சொல்லுங்களேன்" என்று மன்றாடினாள்.

"ஐயோ! ஐயோ! அந்தப்பாவி நம்முடைய குழந்தையைக்கொன்று வி———————" என்றலறிக் கொண்டு கீழேவிழுந்தான் 'ஹா' என்று கூக்குரலிட்டு அவர் மனைவியும் அவர்மேலேயே சாய்ந்தாள். இருவரும் ஒருவரை யொருவர் கட்டிக் கொண்டழுதார்கள்.

கொஞ்சம் முதல் சோகம் வேகம் தணிந்தவுடன் அவர் மனைவி நடந்த ஸமாசாரங்களை ஆதியோடந்தமாய்க் கேட்டாள். இந்த துக்கத்தை வர்ணிப்பதும் நமக்கு மிகுந்த துக்கத்தைக் கொடுக்கிறது. ஆகையால் சுருங்கச்சொல்லுமிடத்து, அன்றிரவு முழுவதும் அவர்களுக்குத் தூக்கம்பிடிக்கவேயில்லை. இதையேபற்றிப் பேசுவதும், விசாரிப்பதும், பதில் சொல்லுவதும், துக்கிப்பதும், அழுவதுமாய் அச்செல்லா இரவை மிகுந்த ச்ரமபட்டு போக்கினார்கள். கடைசியாய் அவர்கள் அரசன் மீது விரோதம் பாராட்டுவதில் ப்ரயோஜனமில்லையென்றும், பழிக்குப்பழி வாங்குவதற்குத் தகுந்த ஸமயம் பார்த்துக்கொண்டிருந்து ஸாத்தியமானால் அரசனைத் தண்டனைக்குள்ளாக்கி த்ருப்தியடைகிறதென்றும், இல்லாவிட்டால் ஸகலத்திற்கும் ஸாக்ஷி பூதமாய் நிற்கும் பரம்பொருளே அவனை தண்டிப்பார்; அதைக்கண்டாவது த்ருப்தியடைவோ மென்றும், இப்படி பல வாறாய் ப்ரயோர்ஜனமற்ற வார்த்தைகளை பேசிக் கொண்டிருந்தனர்.

———

# CHAPTER 6.

இந்த ஸம்பவங்களெல்லாம் நடந்து வெகு காலமாயினது. பாரஸீக ராஜ்யத்தின் ராஜதானி 'மீடியர்' தேசத்திலிருந்தது. அவ்விடத்தில்தான் பாரஸீக அரசனுடைய ராஜ ஸபை விளங்கினது. ஏற்கனவே மீடியா என்பது பாரஸீகதேசத்தின் எல்லைக்கு வெளியிலுள்ள தேசம் என்று சொல்லியிருக்கிறோம். இரண்டும் ஓரரசன் குடைக்கீழிருந்ததனால் ஒற்றுமையுள்ளதாகவேயிருக்கலாம் என்று யாவரும் எண்ணக்கூடும். ஆனாலது அப்படியல்ல. மீடர்களுக்கும் பாரஸீகர்களுக்கும் எப்பொழுதும் மிகுந்த பேட்டாபேட்டி உண்டு. பாரஸீக தேசத்திற்கு ஏதாவது ஸௌகர்யங்கள் ஏற்படுமானால், அது மீடர்களுக்கு மிகுந்த பொறாமைக்கு ஆஸ்பதமாகும். பாரஸீகர்களும் முடியாத்தனத்தினாலோ அல்லது வேறெந்தக் காரணத்தினாலோ, பாரஸீக அரசனுக்குட்பட்டிருந்தார்களேயன்றி, யாராவதொருவர் ஏற்பட்டு பாரஸீகவரசனை ஜயித்து, பாரஸீகத்தை விடுவிக்கக்கூடுமானால் அவன் கொடிக்கீழ் ஒன்றுகூடப் பாரஸீகர் அத்தனை பெயர்களும் ஸித்தமாயிருந்தார்கள். இப்படிப்பட்ட பாரஸீகத்திலே ஸைரஸ் பத்தாவது வயதிற்குமேல் இருந்து வளரும்படி ஏற்பட்டது.

மண்டனையின் புருஷன் (அதாவது ஸைரஸ்ஸின் தகப்பன்) பாரஸீகத்தான். ஆகையால், அஸ்டியாகஸ்,

அவன் மகனுகிய ஸைரஸ்ஸை அவனிட மொப்பித்து, பெண்சாதியையும் குழந்தையையு மழைத்துக் கொண்டு இஷ்டமான ப்ரதேசத்தில் வஸிக்கலாமென்று உத்திரவு கொடுத்தவுடனே, அவன் தான்பிறந்த நாடாகிய பாரஸீகத்தையே நாடினுன். அங்கு மூன்று பெயர்களும் வெகு ஸௌகர்யமாகவே வாஸஞ்செய்து வந்தார்கள்.

கால க்ரமத்தில் ஸைரஸ் பிறப்பு முதலியன ஸம் பந்தமான கதைகள் ஜநங்களுக்கு தெரிந்து, ஊரெங் கும் பரவலாயின. பாரஸீகர்கள் அஸ்டியாகஸ் கண்ட ஸ்வப்நத்தின் பலன் நிறைவேறிவிட்டதாக நம்பவில்லை. ஸைரஸ் எப்பொழுதாவது அரசனை ஜயித்து, இரண்டு தேசங்களையு மாள்வான் என்று யாவரு மெண்ணினுர் கள். அவர் அவ்விதம் நம்பியதற்குக் காரணம் ஸைரஸ் என்பவனுடைய நடையுடை பாவனைகளே. அவன் எந்த வேலை செய்வதானுலும் அதிலொரு ராஜரீக அழகிருந்தது. அவன் பேச்சிலேயே ஒரு கம்பீரம் குடிகொண்டிருந்தது. அவனுடைய நோக்கே ஸிம்மக் குட்டியின் நோக்காக விருந்தது. ஊரிலுள்ள அனை வரும் அவனிடம் அன்பு பாராட்டினுர்கள். இப்படி ஊருக்கே யொரு செல்வமாய் வளர்ந்து வந்தான் ஸைரஸ்.

ஆனுல் ஸைரஸ் விஜயசீலனுன பாரஸீகத்தரசன் அஸ்டியாகஸ்ஸை எப்படி ஜயிக்கமுடியும் என்ற கேள் விக்குமட்டும் பதில் சொல்லுவார் ஒருவரும் கிடை யாது. இந்த ஸந்தேஹம் ஹார்பகஸ் மனதிலில்லாமல்

போகவில்லை. ஹார்பகஸ் மீடியாவிலேயே ராஜ ஸபையிலேயே காலங்கழித்து வந்தான். அரசன் அவ னுக்கிழைத்த தீங்குமட்டும் அவன் மனதை விட் டகலவேயில்லை. அரசனிடம் பேசும்போது அவன் வார்த்தைகளில் எவ்வளவு தேனெழுகுவதாகக் காணப் பட்டாலும் அவன் மனதில்மட்டும் பழிக்குப்பழி என்ற ஹாலாஹலவிஷம் கொழுந்து விட்டெறிந்து கொண் டிருந்தது. அரசன் அகந்தையைக்குலைத்து, அவனை யெப்படி பங்கப்படுத்தலாம் என்று அவன்யோசிக்காத நாள் கிடையாது. ஆயினும் எந்த தந்த்ரமும் ஸுலப மாய்ப் பலன் தரக்கூடியதாகவும் பயத்திற்கு ஹேது வில்லாததாகவும் காணப்படவில்லை. இப்படிப் பல வருஷங்கள் சென்றன.

காலகதியோ, அரசன் செய்த தீவினைப் பயனோ, அவனுக்குண்டான ஸ்வப்நத்தின் பலன் வரவேண்டிய காலம் ஸமீபித்ததினாலோ, என்ன காரணமோ, அரச னுடைய சித்தம் வரவர க்ரூரமான வழிகளில் செல்லத் தலைப்பட்டது. குடிகளை மிகுந்த தொந்திரைக் குள் ளாக்கினன். ப்ரபுக்களைக் கௌரவமின்றி நடத்தத் தலைப்பட்டான். அக்ரமமான செயல்களில் மிகுதியும் ஸந்தோஷித்தான். இவ்விதம் ஜனங்களுடைய அபி மானம் அரசனைவிட்டு வரவர விலகிக் கொண்டே வந்தது.

இந்த ஸமயத்தை விட்டால் வேறு ஸமயம் கிடைப்பதரிது என்று ஹார்பகஸ் மனதிலுதித்தது. ஆகவே, அரசன் கொடுமையாய் நடத்தின, அல்லது

அவமதித்த பிரபுக்களிடம் தனித்தனியே சென்று அவர்களுடைய மனதைக் கலைத்து, அஸ்டியாகஸ் அரசாளுவதற்கு யோக்கியனல்ல என்று எண்ணும்படி அவர்கள் மனதைப் பக்குவப்படுத்தினான். பிறகு கூடுமானால் ஸைரஸ் என்பவனை பாரஸீகத்திலிருந்து கொண்டுவந்து, பாரஸீக ராஜ்யாதிபதியாய்ச் செய்கிறது என்று எல்லா ப்ரபுக்களும் கூடி யோசனை செய்து முடித்தார்கள்.

கூடுமானாலல்லவா? எப்படிக்கூடும்? கூடவில்லை. யார் துணிந்து இத்தகைய கார்யங்களில் முன் வருவார்கள். ப்ரபுக்களுடைய சித்தவ்ருத்தி இவ்வாறிருக்கிறதென்று அரசனுக்கு ஸ்வல்பம் தெரியுமானால் வந்துவிட்டது அநர்த்தம். அரசனைக் கவிழ்க்கவேண்டிய காலம் கைக்கெட்டியும் வாய்க் கெட்டவில்லையே என்று ஹார்பகஸ் வருந்தினான். எதுவும் அதது வருங் காலத்தன்றோ வரும். நாம் அவசரப்பட்டென்ன செய்யலாகும்.

கடைசியில், ஒருநாள் படுக்கையில் படுத்தப்படி ஹார்பகஸ் சிந்திக்கலானான். "மீடர்களைக் காட்டிலும் பாரஸீகர்களுக்கு அரசனிடத்தில் அதிக வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது. ஆகையினால் பாரஸீகர்களைத் தூண்டிவிடும் பட்சத்தில் இக்கார்யம் ஸுலபமாய் முடியும். ஆனால் பாரஸீகர்களை ஒன்றுசேர்க்க யாரிருக்கிறார்கள்? ஏன் ஸைரஸ்ஸைக் கொண்டே இக்கார்யத்தைச் செய்து முடிக்கலாகாது. இப்பொழுது அவனுக்கு வயது இருபத்தைந்தாகிறது அவனுடைய ஸாமர்த்

தியமும் தந்த்ரமும் வெகுவாய் எங்கும் புகழப்படு கின்றன. ஆகையால் அவனிடம் இதுவரை நம் முண்டைய அபிப்ராயங்களை வெளியிடா திருந்தது தவறு."

உடனே படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். இன்னொரு ஸங்கடம் புதிதாய் முளைத்ததாகத் தோன் றிற்று. "தன்னுடைய அபிப்ராய மின்னவிதமா யிருக்கிறது" என்று ஸைரஸ்ஸுக்கு எப்படித் தெரி விக்கிறது. காலமோ கெட்டகாலமாக விருக்கிறது. ஸைரஸ் மேல்விலாஸத்திற்கு ஒரு கடிதமெழுதி பார ஸீகத்திற் கனுப்புவது அபாயகரமான கார்யம். யார் கையிலாவது அக்கடிதம் சிக்கி, அரசனிடம் சேரு மானால் வேறு வினை வேண்டாம். ஆனால் தானிறக்க வேண்டி வரும் என்பதில் ஹார்பகஸ்ஸுக்குப் பய மில்லை. தன்னுயிரைக் கேவலம் த்ரணமாக நினைத் திருந்தான். ஆனால் அரசன்மீது பழிக்குப்பழி வாங் கும் வரையில் எப்படியாவது தன்னுடைய ஜீவிதத்தை அபாயங்களிலிருந்து காப்பாற்றிக் கொள்ள வேண்டி யது ஒரு கடமையென்று அவன் கொண்டிருந்தான். அஸ்டியாகஸ் செய்த அக்ரமச் செயலுக்குத் தகுந்த தண்டனை விதிப்பதற்கு கடவுள் தன்னை நியமித்திருப்ப தாக அவன் நம்பியிருந்தான்.

முடிவாக தன் மனதிற்குள் ஒரு தீர்மானஞ் செய்துகொண்டு அன்றிரவைக் கவலையற்ற தூக்கத்திற் கழித்து, மறுநாட்காலையில் எழுந்தவுடன் தனக்கு வெகு நம்பிக்கையான ஒரு ஸேவகனை யழைத்து, காட்

டிற்குள் போய் வேட்டையாடி ஒரு முயல் கொண்டு வரும்படி ஹார்பகஸ் ஆக்ஞாபித்தான். அன்று ஸாயங் காலம் அப்படியே அந்த ஸேவகனால் ஒரு முயல் கொண்டுவரப்பட்டது. அந்த ஸேவகனை ஒரு வேடு வன்போல் மாறுவேஷம் போட்டுக்கொள்ளச் செய்து அந்த முயலை அவன் கையில் திருப்பிக்கொடுத்து, "இதைப் பாரவீகத்திற்கு எடுத்துக்கொண்டுபோய், மண்டனையின் குமாரன் ஸைரஸ்விற்கு நான் இஞ்ம் அனுப்பினதாகக் கூறு" என்று சொல்லி இன்னும் ஏதோ சில ஸமாசாரங்கள் அவன்காதோடு சொன்னான். அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்ட அந்த ஸேவ கன் அன்றிரவே பாரவீகத்திற்குப் புறப்பட லானான்.

---

# CHAPTER 7.

அந்தக்காலங்களில் ஒருதேசத்திலிருந்து வேறு தேசத்திற்குச் செல்லுவதானால், அது ஸாமான்ய மான காரியமன்று. நல்ல ரஸ்தாக்கள், ரயில்வேப் பாதைகள் முதலியன அக்காலத்தில் கிடையாது. அநேகமாய் கால் நடையாகவாவது, குதிரைகளின் மீது ஸவாரிசெய்தாவது மிகப்பிரயாஸையின் பேரில் யாத்திரைகள் செய்யப்படவேண்டும். காடுகள், மலை கள், வனங்கள், வனாந்தரங்கள் முதலியனவற்றைக் கடந்து இந்த ஸேவகன் பாரஸீகத்தில் மண்டனை யாதியர் வஸித்துவரும் மலைப்ரதேசம் வந்து சேர்ந் தான்.

ஆங்குள்ளவர்களை அவசியமான சிலகேள்விகளைக் கேட்டு, அவர்களுடைய வீடு இருக்குமிடம் அறிந்து, தூதுவன் அங்குபோய்ச்சேர்ந்தான். அந்த ஸமயம் வாசலில் ஸைரஸ் நின்றுகொண்டிருந்தான்.

"நீ யார்?"

"நான் ஹார்பகஸ் என்பவர் அனுப்பிய வேலைக் காரன். இந்த வீட்டிலிருக்கும் ஸைரஸ் என்பவரை பார்க்கவேண்டும். தயைசெய்து, அவரை இங்குவரச் செய்வீரா" என்று ஸேவகன் கேட்டான்.

"அவரிந்த ஸமயம் இங்கில்லாவிட்டால்?"

"அவர் வரும்வரை நான் காத்திருக்க வேண்டும்."

"ஏன்? என்னிடம் அந்தஸமாசாரத்தைச் சொன்னால் நான் அவரிடம் சொல்லிவிடுகிறேன்!"

"எனக்கு அப்படி உத்திரவில்லை."

"ஓ ஹோ! அவ்வளவு ரஹஸ்யமான காரியத்தை ஸைரஸ் இன்னுமொன்றறியாத உன்னிடம் ஒப்படைத்தாரோ?"

ஹார்பகஸ்செய்த பிசகு தூதுவனுக்குப்பட்டது. "இந்தப் பையன் கேட்கும் கேள்வி ந்யாயந்தான். ஊருக்கேதிரும்பிவிடுவோமா" வென்றுகூடயோசித்தான். இந்த ஸமயத்தில் மண்டனையம்மாள் "ஸைரஸ்" என்று உரத்த குரலிலழைத்தாள். ஸைரஸ் "இதோ வந்துவிட்டேன்" என்று அவளுக்கு பதிற் சொல்லிவிட்டு "அது கிடக்கிறது நான்தான் ஸைரஸ் என்று தெரிந்துக்கொண்டாயல்லவா? ஹார்பகஸ் என்ன ஸமாசாரம் சொல்லச் சொன்னார்" என்று கேட்டான்.

தூதுவனுக்கு இது ஸந்தேஹாஸ்பதமாகத் தோன்றவில்லை. உடனே தன்னுடையினடியிலிருந்து ஒரு முயலையெடுத்துப் பையனிடம் கொடுத்து "இதை ஹார்பகஸ் உம்மிடம் கொடுத்துவரச்சொன்னார். இது ஒரு அபூர்வஜாதி முயலாம். இதை உம்முடைய கையினாலேயே வேறொருவருமில்லாத விடத்தில், அறுக்க வேண்டுமாம். அப்படிச் செய்வீராகில் அளவிடற்கரிய பாக்கியம் உமக்குக் கிடைப்பதற்கு வழிதோன்று

மாம். ஜாக்ரதையாக விருக்கவேண்டுமென்று மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொண்டார்'' என்று சொன்ஞன்.

அதை ஸைரஸ் கையில் வாங்கிக்கொண்டு தூதுவனை யுள்ளே வரும்படி வேண்டினுன் "எனக்கு அப்படி உத்திரவில்லை. நான் நேராக ஊருக்குப் போய் ஸமாசாரம் அவருக்குத் தெரிவிக்கவேண்டும். மிகுந்த கவலையுடனிருப்பார். எனக்குத் தாமதிக்க ஸாவகாசமில்லை'' என்று சொல்லிக்கொண்டே திரும்பி வேகமாகப் போய்விட்டான்.

ஸைரஸ், தன் தாயாருக்கும் தெரியாமல் அதை யொளித்து வைத்துவிட்டு, தன் தாயினிடம் சென்று வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டிருந்தான்.

அன்றிரவு சாப்பாடு முடிந்தபிறகு யாவரும் படுத்துத் தூங்கி விட்டார்கள்; ஸைரஸ் மட்டும் தூங் காமல் தன்னுடைய அறையிலேயே படுத்திருந்தான் அதற்கு முன்னலேயே முயல் அவனுடைய அறைக் குள் கொண்டு வந்து வைக்கப்பட்டிருந்தது. இரவில் பன்னிரண்டு மணியாகவும், யாவரும் அயர்ந்து தூங்கு கிருர்கள் என்று நிதானித்துக் கொண்டு, அம்முயலை ஒளியவைத்திருந்த இடத்திலிருந்துவெளியே எடுத் துப்பார்த்தான். ஸாதாரண முயல்களுக்கும் அதற்கும் ஒரு வ்யத்யாஸமும் தென்படவில்லை. ஆச்சர்யத்து டன், சட்டைப் பையிலிருந்த கத்தியை யெடுத்து வயிற்றில் ஒரு அறுப்பு அறுத்தான். முயல் இரண்டு துண்டாயிற்று. அதனுடைய வயிற்றின் மத்தியி லிருந்து ஒரு கடிதம் விழுந்தது. அதையாவலுடன்

எடுத்து விளக்கடியில் கொண்டு போய் வாசித்தான். அதில் பின் வருமாறு எழுதப்பட்டிருந்தது.

" சொன்னது கேட்பாயாகில் சுருக்கென அரசனுவாய். உனது நாட்டிலுள்ள பாரஸீகர்களை ஒன்ருய்த் திரட்டிக் கொண்டு மீடியாவின்மேல் படையெடுத்து வருவாயானல், மீடர்களி லொருவரும் உன்னை யெதிர்க்க மாட்டார் என்று நிச்சயமாய்ச் சொல்லுவேன். செய்வதை ஜாக்ரதையாய்ச் செய்."

அதை வாசித்ததும் அப்படியே யோசனையிலழுந்தினவனாய் உட்கார்ந்தான். காலம் செல்லுவது அவனுக்குத் தெரியவேயில்லை. பொழுது விடிந்தது; ஸூர்யகிரணங்கள் அறைக்குள் நுழைந்த பிறகுதான் அவனுக்கு ஸ்வய ஞாபகம் வந்தது.

மறுநாட்காலையில் பாரஸீகர் அனைவருக்கும் ஸைரஸ் தெரிவித்ததாவது பாரஸீகர்களே! நேற்றைய தினம் அஸ்டியாகஸ் என்னும் நம்மரசரிடமிருந்து உத்திரவு வந்தது. அதில் என்னைப் பாரஸிக ஸைந்யத்திற்குத் தளகர்த்தனுக அரசன் நியமித்திருக்கிருர். இத்தகைய கௌரவம் எனக்குக் கொடுத்ததற்காக அரசனுக்கு நிரம்ப வந்தனமுடையவனுகிறேனென்ருலும், அக்கௌரவத்திற்கு நான் எத்துணை தகுந்தவன் என்று எனக்கு விளங்கவில்லை. ஆயினும் உங்களுடைய ஒப்புறவுமட்டும் எனக்கிருக்குமானல், அரசனுடைய த்ருப்தியை ஸாதிப்பதுடன், பாரஸீகர்களாகிய உங்களுக்கும் அழியாத கீர்த்தியையுண்டு பண்ணி வைப்பேனென்ற தைரியம் எனக்கு மிகுதியு மிருக்கி

றது. ஆதலால் நானிந்த கௌரவத்தை யொப்புக் கொள்ளுவதா அல்லவா என்று தீர்மானம் செய்வது உங்கள் கையிலிருக்கிறது'' என்று சாதுரியமாய் அவர்கள் மனங்களைறயப்பேசினன்.

'அப்படியே செய்யுங்கள்;'' "ஸைரஸ்ஸே தான் ஸேனபதியாக வேண்டும்'' "உம்மையன்றி வேறொருவரையும் வேண்டோம்''; அரசன் இருந்தாலும் விவேகிதான்; இனித்தான் அவனுக்கு நல்ல காலம்'' "ஸைரஸ் நீடூழி வாழ்க'' என்று அநேகமாயிரம் ஒலிகள் கோஷித்தன.

"என் ஹிதத்தைத்தேடும் அருந்தோழர்களே! கேளுங்கள்: இந்த ஸமயம் உங்களுக்கு உத்ஸாகமாக விருக்கிறது: நாளைக்கு எப்படியிருக்குமோ! அடுத்த நிமிஷம் எப்படியோ! ஸேனதிபதியின் வேலையென்றால் ஸாமான்யமல்ல. சில ஸமயங்களில் கடுமையான உத்திரவுகளிடும்படி யிருக்கும். சில ஸமயங்களில் உங்கள் மனதிற்கு ஏலாத கார்யங்களைச் செய்யும்படி உங்களுக்குக் கட்டளை யிடும்படி வரும். அப்பொழுதெல்லாம்.———

"தாங்கள் என்னை நெருப்பில் விழச்சொன்னாலும் விழத்தாமதியேன்'' என்று அநேகம் பெயர்கள் ஒரே காலத்தில் உரக்கக் கூவினார்கள்.

"நிரம்ப வந்தனம். ஸ்வல்பமான அபராதங்கள் நீங்கள் செய்தவிட்டதும் ஸைந்யத்தினுடைய ஒழுங்கை உத்தேசித்தாவது கடுமையான தண்டனைகளை விதிக்கும்படியாக வரும்.''

"நீங்கள் எந்த தண்டனை விதித்தாலும் அந்த தண்டனை குற்றத்திற்கு தகுந்ததென்றே எண்ணு வோம்" என்றார்கள் ஸைநிகர்.

"மறுபடி நிரம்பவந்தனம். இப்பொழுதிருக்கிற ஸ்திதியில் நீங்கள் என்னுத்திரவுப்படி எதுவும் செய் வீர்கள் என்பதில் கிஞ்சித்தும் எனக்கு ஸந்தேஹ மில்லை. மனிதனுடைய மனோ நிலைமை ஒரு வழிப்பட் டதில்லை. நான் வருங்காலத்தைப்பற்றியல்லவா பேசு கிறேன். ஒருமாதம், ஒருவருஷம், பத்துவருஷம் க்ர மித்து உங்களுடைய மனம் இந்த நிலைமையிலேயே யிருக்கு மென்பதற்கு என்ன உத்திரவாதம்? அத னாலே பயப்படுகிறேன்."

"இப்பொழுது அதற்காக என்ன செய்யவேண்டு மென்கிறீர்கள்?" என்றான் ஒரு போர்வீரன்.

"நானொருவிதமாய் உங்களைப் பரீக்ஷை செய்யலா மென்று உத்தேசிக்கிறேன்."

"என்ன! என்ன!" சொல்லுங்கள்! சொல் லுங்கள்! தவறாமல் செய்வோம்" என்று பல குரல் கள் ஒருங்கே கேட்டன.

"நானிவ்விடத்திலேயே இருப்பேன், நீங்கள் உங் கள் வீடுகளுக்குப்போய் உங்களுடைய வாங்கரி வாட்களை எடுத்துக்கொண்டு என்னை இங்கு வந்து பாருங்கள்" என்று ஸைரஸ் கம்பீரமாய் அவர்களுக் குத்திரவிட்டான்.

ஸைநிகர்கள் நாலா திசைகளிலும் ஓடினார்கள். அரைமணி நேரத்தில் வாங்கரிவாள் ஸஹிதம் வந்து சேர்ந்தார்கள்.

"ஸ்வாமி! உத்திரவிற்குக் காத்திருக்கிறோம்" என்று எல்லோரும் விக்ஞாபித்தார்கள்.

ஸைரஸ் மந்தஹாஸம் செய்துகொண்டு "பரீக்ஷையில் தேறுவீர்கள் போலத்தான் தோன்றுகிறது. என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள்" என்று சொல்லி முன்னே நடக்க, ஸைநிகர்கள் ஜயகோஷம் செய்துகொண்டு, உத்ஸாகத்துடன் ஸைரஸ்ஸைப் பின் தொடர்ந்தார்கள். ஸைரஸ் ஊரெல்லையைத் தாண்டி வெகுதூரம் நடந்தான். ஒருவருக்கும் இன்ன காரணத்தை முன்னிட்டு நம்மை அழைத்துக்கொண்டு போகிறான் என்று தெரியாது. ஆயினும் அவர்களில் ஒருவரும் முணுமுணுக்கவில்லை. மிகுந்த ஸந்தோஷத்தால் யாவரும் பூரித்திருந்தார்கள்.

கடைசியில் ஸைரஸ் ஒரு மேடிட்ட பூமியின் பேரில் நின்று ஸைநிகர்களை யழைத்து "ஸைநிகர்களே! அதோ அந்த மைதானத்தைப் பாருங்கள். வெகு தூரம் போகிறது. கண்ணுக்கெட்டும் தூரம் வரையில் சிகு தவிர வேறொன்றும் இதிலில்லை. இடுப்பளவு வளர்ந்து தழைத்து பூமியே தெரியாமல் மறைத்து நிற்கிறது. இந்த விடத்தை ஏதாவது ஒரு காரியத்தை உத்தேசித்து 'காலி' ப்படுத்த வேண்டுமானால், இந்த மைதானத்தின் ஓரத்தில் நெருப்பைக் கொளுத்திவிட வேண்டியதைத் தவிர வேறொன்றும் செய்யவேண்டியதில்லை. என்றாலும் என்னுத்தேச மப்படியல்ல. இன்று பொழுதுபடுவதற்கு முன் இந்த மைதானத்திலுள்ள பயிர் முழுதும் அறுக்கப்பட்டு அப்புறப்படுத்தவேண்

டும். அவ்விதம் செய்தாயிற்றென்று நாளைக் காலையில் என்னிடம் வந்து சொல்லவேண்டும். இக்கார்யத்தைச் செய்து முடிப்பீர்களானால், நானுங்களுக்கு தளகர்த்தனுவதில் ஸந்தேஹமில்லை" என்று சொல்லி முடித்து விட்டு ஊரை நோக்கித் திரும்பினான்.

ஸைரஸ் திரும்புவதற்குள் ஆயிரம் அரிவாட்கள் அந்தப்புல் வனத்தின் மத்தியில் புக்கன. அல்ப நேரத்திற்குள் வெகு தூரம் அறுவடையாயிற்று. கதிரொருமுழம் நீண்டு, பொன்னிறம் வாய்ந்த கதிர்களின் பாரத்தால் தாங்காது சாய்ந்துகிடக்கும் நெற்பயிரைக் கண்டு களித்த குடியானவர்களும் இவ்வளவு வேகமாய் வேலைசெய்யார்கள். அஹோ! உத்ஸாக சக்தியின் மஹிமை!

மறுநாள் பொழுதுவிடிந்தது. முதல் நாளே அஸ்தமிப்பதற்குள்ளேயே மைதானமுழுவதும் புற்களின் பூண்டே யில்லாமல் ஒழிக்கப்பட்டது என்று நாம் சொல்லவேண்டிய அவசியமில்லை யென்று நினைக்கிறோம். பாரஸீகஸைந்யம் மறுபடி திரண்டு ஊருக்கு வெளியிலுள்ள ஸமபூமியில் கூடிற்று. ஸைந்யத்திலிருந்து ஒரு தூதுவன் ஸைரஸ்ஸினிடம் வந்து நடந்த ஸங்கதியைக் கூறினான். ஸைரஸ் ஸந்தோஷித்து, ஸேனையின் பேட்டிக்காக வெளியேறினான்.

ஸைரஸ் ஸைநிகர்கள் பார்க்கக்கூடிய தூரத்தில் வரும்பொழுதே ஆரவாரங்களும் கரகோஷங்களும், ஆரம்பித்தன. அவன் ஸமீபம் வந்து, பேசவிரும்பி ஒரு சைகைசெய்யும்வரை அந்த கோஷம் அடங்கவே

யில்லை. ஸைரஸ் கையைத்தூக்கினதுதான் தாமதம் மழைபெய்து ஓய்ந்ததுபோல் ஸைந்யம் முழுவதும் கப், சிப் என்றடங்கியது. அஹோ! அன்பென்னும் பக்தியின் மஹிமை!

ஆரம்பித்தான் ஸைரஸ். அவனுடைய குரல் ஸைந்யம் எங்கும் தெளிவாய்க் கேட்கும்படி யவ்வளவு உரப்பாகவிருந்தது "ஸஹோதரர்களே! நிரம்ப ஸந்தோஷம். நான் நினைத்தேன். நினைத்தபடி செய்து முடித்தீர்கள். உங்களுக்கு ஸன்மானம் செய்யவேண்டுமென்று நினைக்கிறேன்"?

'எங்களுக்கு ஸன்மானம் ஒன்றும் வேண்டாம்' ஸன்மானத்திற்காக இந்தவேலை நாங்கள் செய்யவில்லை "தளகர்த்தர் வேலையை ஒப்புக்கொள்வதாகச் சொல்லவில்லையே" என்று பலகுரல்கள் கிளம்பின.

ஸைரஸ் மந்தஹாஸம் செய்து கொண்டான். "ஸரி. நம்முடைய மருந்து நன்றாய் வேலைசெய்கிறது காற்றுள்ள போதேதான் தூற்றிக்கொள்ள வேண்டும்" என்று தனக்குள் நினைத்துக் கொண்டான்.

"ஸஹோதரர்களே! நான் சொன்ன சொல்லிலிருந்து தவறுபவனல்ல. நேற்றையதினமே, மைதானம் முழுதும் அறுவடை முடிந்து விடும் பட்சத்தில் தளகர்த்தன் வேலையை யொப்புக் கொள்வதாக வாக்களித்திருந்தேன். மைதானம் அறுவடையாய் விட்டது. ஆகையால் நானும் மேற்படி வேலையை ஒப்புக்கொண்டாயிற்று. அதை மறுபடி சொல்ல வேண்டாமென்று நினைத்தேன்."

ஸைநிகர் அவனை மேலே பேசவிடவில்லை. கர கோஷத்திற் காரம்பித்தார்கள். கெக்கலி கொட்டினார்கள். எக்களித்தார்கள். குதித்தார்கள். 'ஜே' 'ஜே' என்று கோஷித்தார்கள். ஸைரஸ் அன்புடன் ஸைந்யம் முழுவதிலும் தன் கண்களைப் பறக்க விட்டுப் பார்த்து ஆர்வத்துடன் சிரித்தான். மறுபடி பேசவிரும்பிய ஜாடையாய்க் கையை ஆகாசத்திற்றூக்கவே, ஒருவாறு அடங்கிற்று ஸேனாஸமுத்திரத்தின் ஆரவாரம்.

"ஸகோதரர்களே! உங்களுக்கு ஸந்மானம் செய்யவேண்டு மென்பது என்னுடைய அபிப்ராயம். நான் சொல்லுவதை முழுவதும் கேட்டுவிடுங்கள். 'எங்களுக்கு ஸந்மானம் ஒன்றும் வேண்டாமென்று' ஒரு சப்தம் என்காதில் பட்டது. ஆனால் அவ்விதம் சொன்னது என்னிஷ்டத்திற்கு விரோதம். நானிடும் கட்டளைக்கு மாறு செய்ததாக ஆகும். ஆனால் இந்த ஸமயத்தில் என்னுடைய கட்டளையை அகௌரவப் படுத்தவேண்டுமென்று அப்படி யவர் சொன்னதாக நான் அர்த்தஞ் செய்துகொள்ளவில்லை. அவருடைய அபிப்ராயமின்னதென்று நன்றாயறிந்து கொண்டேன். ஆயினும் ஸைந்யத்தின் ஒழுங்கிற்கு அவ்விதங்கூட விருக்கக்கூடாதென்பது என் அபிப்ராயம்."

ஸைரஸ் இங்கே மூச்சு வாங்குவதற்காக நிறுத்தினது போல் காணப்பட்டது. ஆனால் தான் சொன்ன வாசகம் ஸைநிகர்களின் மனதில் எவ்வித மாறுதலை யுண்டுபண்ணிற்றென்று கவனிப்பதற்காகவே. ஸைநிகர்கள் பரமோத்ஸாகத்துடன் "நீங்கள்

சொல்லுவதை நாங்கள் மறுக்கவில்லை, என்ன சொன்னாலும் கேட்போம்" என்றார்கள்.

"நீங்கள் நேற்று முழுவதும் ச்ரமப்பட்டு உழைத்ததற்காக உங்களுக்கொரு விருந்து ஏற்பாடு செய்து வைத்திருக்கிறேன். அதை யனுபவித்து மறுபடி என்னை ஸாயங்காலம் நீங்களனைவரும் சண்டுகொள்வீர்கள் என்று நம்புகிறேன்" என்று ஸைரஸ் சொல்லவும் எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள்.

விருந்து வெகு விமர்சையாய் நடந்தது. மிகவும் அபூர்வமான பக்ஷணவகைகளெல்லாம் அன்று செய்யப்பட்டிருந்தன. ஸேனாஸமுத்திரத்தின் கோலாஹலம் சொல்லி முடிபோகாது. ஸைரஸ்வின் நற்குணங்களை பலபல விடங்களில் சிறுசிறு கூட்டங்களாகக்கூடி போர் வீரர்கள் பேசத் தலைப்பட்டார்கள். அதிக வார்த்தை வளர்ப்பானேன். ஸைரஸ் தெய்வத்திற்கு ஸமானமான உயர்ந்த பதவிக்கு அன்றே உயர்த்தப்பட்டான்.

மறுபடி ஸாயங்காலம் ஸைரஸ் ஸேனையை ஊருக்கு வெளியிலுள்ள மைதானத்தில் ஸந்தித்தான்.

"போர்வீரர்களே! நேற்று வேலை எப்படி? இன்றெப்படி? தராதரமறிந்து சொல்வீர்களா?" என்றான் ஸைரஸ்.

அநேகர்களுக்கு ஸைரஸ் கேட்பதென்னவென்றே விளங்கவில்லை. வேறு சிலருக்கு இக்கேள்வி எதற்காகக் கேட்டிருக்கிறான் என்பதுதான் ஸந்தேஹம். ஸேனா வீரர்களுக்குள் மிகவும் புத்திசாலியான ஒருவன் முன் வந்து "நேற்றைக்கும் இன்றைக்குமுள்ள வ்யத்யாஸம்

அடிமைத் தனத்திற்கும் ஸ்வயேச்சைக்குமுள்ள வ்யத்யாஸத்தை யொத்திருக்கிறது'' என்ருன்.

'ஸரியாகச் சொன்ஞய்' என்று முகத்தில் நீத்த முறுவலுடன் ஸைரஸ் மொழியலானுன். "ஸரியாகச் சொன்ஞய். அதுவே என்னுடைய அபிப்ராயமும். நேற்று நீங்கள் செய்த வேலை முழுதும் மிகக்கஷ்ட மானது. அருவருப்பானது. மனதிற்கு வெறுப்பைக் கொடுக்கக்கூடியது. தேகத்திற்கு மிகுந்த ஆயாஸத்தை விளைவிப்பது. அடிமை செய்யவேண்டிய வேலை. இன் றைக்கு அப்படியல்ல. மனேத்ஸாஹத்தைக் கொடுக்க வல்ல கார்யம் இன்றையது. பாக்கியசாலிகளுக்கே கிடைக்கக்கூடியது. ப்ரபுக்கள் அநுபவிக்கத் தகுந் தது. இந்த வ்யத்யாஸத்தைக் கவனியுங்கள். மனதி லிருத்துங்கள். ஆயிற்ரு? இப்பொழுது உங்களுடைய இஷ்டமென்ன? ப்ரபுக்களாயிருக்க விரும்புகிறீர்களா? அல்லது என்றென்றைக்கும் அடிமைகளாகவிருந்து, கஷ்டப்பட்டு, இக்கற்பாறைகளுக்கிடையே புகழற்ற ஜீவனம் செய்ய விரும்புகிறீர்களா? உங்களிஷ்டம் எது?''

ஸைநிகர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஒரு வரும் ஒன்றும் பேசவுமில்லை. நிச்சப்தமாய் நின் ருர்கள்.

ஸைரஸ் பேசவாரம்பித்தான். "நான் சொல்லு வது உங்களுக்கு நன்ருய் விளங்கவில்லை போலும். வாஸ்தவம். நானு மப்படியே நினைத்தேன். நீங்க ளிருக்கும் ஸ்திதியை யோசித்துப்பாருங்கள். நீங்கள்

பாரவஸீகர்கள், உங்களை யடிமைகொண்ட ப்ரபுக்கள் மீடியர்கள். அவர்கள் வாழ்க்கைக்கும் உங்கள் வாழ்க்கைக்கும் நேற்று நீங்கள் செய்த கஷ்டமான வேலைக்கும் இன்று அநுபவித்த விருந்திற்கு முள்ள தராதரமிருக்கிறது. ஆகையால் நானுங்களை இட்டுக்கொண்டு போய் மீடியாவை ஜயித்து, உங்களை ப்ரபுக்களாகவும் மீடியர்களை யடிமைகளாகவும் செய்யக் கருதியிருக்கிறேன். உங்களுடைய உதவியும் ஒத்துமையும் இருக்குமானல் இக்கார்யத்தை நான் செய்து முடிப்பதிலாக்ஷேபனை கிடையாது.'' இங்கே ஸைரஸ் பேசுவதை நிறுத்தினன்.

''ஸைரஸ்ஸே அரசன்! ஸைரஸ்ஸே அரசன்! அவனே அரசனுகத்தகுந்தவன்'' என்று பொருள் படும் பலவிதச் சப்தங்கள் ஸேனு ஸமூகத்திலிருந்து கிளம்பின.

''ஸந்தோஷம். உங்களுடைய அபிப்ராயமும் என்னுடைய அபிப்ராயம் போலவே இருப்பதில் எனக்கு மிகுந்த ஸந்தோஷம். அப்படியானல் இக்கார்யத்தில் ப்ரவேசிக்க இஷ்டமுள்ளவர்களெல்லோரும் நாளையதினமே வேண்டிய ஆயுதாதி முஸ்தீப்களுடனே வந்து சேரவேண்டும். அதிகாலையில் மீடியாவின்மீது படையெடுத்துச் செல்வதாகத் தீர்மானம் செய்திருக்கிறேன்'' என்று ஸைரஸ் பகரவும் ஸைநிகர்கள் ''ஜயவிஜயீபவ'' என்ருசிகூறி, அவ்விடம் விட்டுக் கலைந்தார்கள்.

இந்த ஸம்பவங்கள் ஊரிலும் அக்கம்பக்கங்களிலும் காட்டுத்தீபோல் பரவியது. முதல் நாள் ஸேனை

யில் வந்திராத அநேகர் மறுநாள் ஸேனையில் வந்து சேர்ந்தார்கள். மீடியர்களைத் தவிடுபொடி யாக்குவதற் குப் போதுமான பெரிய ஸேனை புறப்பட்டு விட்டது. அஸ்டியாகஸ்மீது படையெடுத்து, அப் பெருஞ் சேனையை ஸைரஸ் நடத்திச்சென்றான்.

இப்பெருஞ் சேனை மீடியா வந்து சேறுவதற்கு முன்னாலேயே நடந்த ஸங்கதிகளனைத்தும் அஸ்டியா கஸ் காதிற்கெட்டியது. ஆனால் ஹார்பகஸ்ஸே ஸைரஸ் மனதில் இந்தக் கற்பனை தோன்றுவதற்கு ஆதிகாரண மாக விருந்தான் என்பது ஸைரஸ் ஒருவனுக்குத்தவிர வேறொருவருக்கும் தெரியாதாகையால், அஸ்டியாகஸ் ஸுக்கும் அதுமட்டும் தெரியாது.

தன்னுடைய ராஜ்யாதிகாரத்திற்கு அபாயம் நேர்ந்ததைக் கண்டதும் அஸ்டியாகஸ் வெகு சுறுசுறுப் பானான். வெகுகாலம் ஆகிவிட்டதனாலும், ஹார்பகஸ் அரசனிடம் மிகுந்த பக்தியுள்ளவனைப்போலவே வெகு நன்றாய் நடித்துவந்ததாலும், அரசன் ஏமாந்து போனான். தான் ஹார்பகஸ் விஷயமாய்இழைத்த தீங்கை அவன் சுத்தமாய் மறந்திருப்பான் என்றே அரசன் எண்ணினான். ஆகவே, ஸைந்யங்களைச் சேர்ப் பதற்கும், அவைகளை யுத்தரங்கத்திற்கு நடத்துவதற் கும் ஹார்பகஸ்ஸுக்கே பூரண அதிகாரத்தையும் தந்து, அரசன் அவனையே தளகர்த்தனாகவும் நிய மித்தான். பால்பானைக்குப் பூனையை யண்டக்கொ டுத்த கதைபோலாயிற்று அரசனுடைய கதி.

அம்மட்டிலுமில்லை. அஸ்டியாகஸ் அரசன் நடத்தும் நீதி யநீதியாக விருந்ததென்று முன்னமே கூறியுள்ளோம். அதனுல் ஜனங்களுக்கு அவன்மீது ஸ்வல்பமும் அபிமானமுமில்லாமற் போயிற்று. ஸ்வபாவத்திலேயே எல்லாம் நெருப்பு பற்ற வித்தமாயிருந்தது. ஒரு குச்சி கிழித்து வைப்பதுதான் பாக்கி. அந்தக்கடமையை ஹார்பகஸ் மூலமாய் ஸைரஸ் ஒப்புக்கொண்டான்.

வந்துவிட்டது பாரஸீக ஸைந்யம் மீடிய ராஜதானிக்கு ஸமீபம். ஹார்பகஸ் அரசனுடைய ஸேனைகளை யணிவகுத்துப் பாரஸீக ஸேனையை எதிர்த்துப் போர் புரிவதென்ற வெளிப்படையான உத்தேசத்துடன் ஊரை விட்டு வெளியே கிளம்பினுன். இரண்டு ஸைந்யங்களும் ஸமீபித்துக் கைகலக்கும் ஸமயத்தில் ஹார்பகஸ் சொன்ன ஓரே வார்த்தையால், மீடிய ஸைந்யம் பாரஸீகத்ததோடு ஒன்று சேர்ந்து, ராஜதானியையே நோக்கிப்புறப்பட்டது. அரசனுடைய உப்பிற்கும் தண்ணீருக்கும் நன்றியறிவு பாராட்டின வெகு சிலரே இப்பெருஞ் சேனையுடன் போர்செய்யத் தலைப்பட்டனர். இவர்கள் ஒரு நிமிஷநேரத்தில் சண்டதுண்டமாய் வெட்டித்தள்ளப்பட்டனர். மீதமிருந்த சிலர் இது நம்மாலாகாத கார்யம். நாமேன் உயிரிழக்க வேண்டுமென்று எண்ணி தமது கால்களை நம்பி ஓட்டமெடுத்தனர்.

இவ்விதம் ஸைரஸ் வெகு ஸுலபமாய் மீடியர்களை ஜயித்து, டியர்கமீளுக்கும் பாரஸீசர்களுக்கும் அரச

ளுன். அரண்மனையிலிருந்து தப்பியோட ப்ரயத்நப் பட்ட அஸ்டியாகஸ் போர்வீரரால் சிறைப்படுத்தப் பட்டு, ஸைரஸ் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத் தப்பட்டான். ஸைரஸ் ஹார்பகஸ் வேண்டு கோளின் படி அரசனை ஹார்பகஸ் கையிலொப்புவித்தான் ஹார்பகஸ்ஸிற்கு தயவுபிறந்தது. இவனை சிறைச்சாலை யிலடைத்துவைத்தால் போதுமென்றெண்ணினான். அவ்விதமே அஸ்டியாகஸ் வாழ்நாளுள்ளமட்டும் சிறை யில் கைதியாய்க் காலங்கழித்தான்.

---

# CHAPTER 8.

---

லைரஸ் லிடியா வென்ற தேசத்தின் மீது படை யெடுத்து அத்தேசத்தை ஜயித்த கதை யொன்றுண்டு. அது பின்வருமாறு:—

பாரஸீக தேசத்திற்கு அடுத்த மேல்புற முள்ளது லிடியா. இரண்டிற்கும் நடுவில் 'ஹாலிஸ்' என்று ஒரு நதிதானுண்டு. இக்காலத்தில் 'லிடியா' தேசத்தில் அரசனாகவிருந்தது க்ரூஸஸ் என்னும் குபேர ராஜன். அவன் மிகவும் ஐச்வரியவான். தனலட்சுமி அவனிடமே குடிகொண்டிருந்தாள் என்னலாம். அவனுடைய தேசத்திற்கு வெகு ஸமீபத்திலுள்ளது 'அயோநியா.' அவ்விடத்தில் கிரேக்கர் என்ற ஜாதியார் குடியேறியிருந்தார்கள். அவர்கள் க்ரூஸஸ் என்பவருடைய ஐச்வர்யத்தைக் கண்டு மயங்கினார்கள். மிகுந்த ஆச்சரியத்வநியுடன் எழுதப்பட்டிருக்கும் கிரேக்கபாஸுரங்களினால் அவனுடைய ஐச்வர்யம் எவ்வளவென்று மதிக்க முடியாதென்று புலப்படும். அதிலிருந்தே இப்பொழுதும் இங்கிலீஷ் முதலிய பாஷைகளில் அவன் நிரம்பப் பணக்காரனோ' என்று இழிவாய்ச் சொல்ல வேண்டிய இடங்களில் "அவன் க்ரூஸஸ் தானே" என்று உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது.

ஒரு ஸமயம் க்ரேக்கர்களில் ஒருவன் க்ரூஸஸ் என்பவருக்கு ஏதோ அவர் மதிக்கும்படியான பெரிய உபகாரம் செய்ததாகவும், கொஞ்சகாலம் க்ரமித்து அதே க்ரேக்கன் அரசனுடைய பேட்டிக்காக லிடியா தேசம் போயிருந்ததாகவும், அந்த ஸமயத்தில் நன்றி மறவாத க்ரூஸஸ் தன்னுடைய கஜானுவிலிருந்து அந்த க்ரேக்கனுல் எவ்வளவு ஐச்வர்யம் எடுத்துக்கொண்டு போக முடியுமோ (மூட்டையாகக் கட்டக் கூடாதென்று நிபந்தனை) அவ்வளவு கூசாமல் இனுமாக எடுத்துக்கொண்டு போகும்படி உத்திரவு கொடுத்தானென்றும், அந்தப் பேராசை பிடித்த க்ரேக்கன் 'தொளதொளத்த' ஒரு அங்கியையும், பெரிய 'பூட்ஸ்' என்ற ஜோடுகளையும், அணிந்து கொண்டு கஜானுவிற்குள் சென்று, எங்தெந்த இடங்களில் தங்கக் கட்டிகளையடைக்கலாமோ அங்கங்கேயெல்லாம் அடைத்தும், அப்படிச் செய்யமுடியாத விடங்களில் தங்கப் பொடிகளை யள்ளித் தூவிக் கொண்டும் புறப்பட்டா னென்றும், [உதாரணமாக தலைமயிர்களில் தங்கப் பொடிகளை வாரித் தெளித்துக் கொண்டானும். சில தங்கக்கட்டிகளை யெடுத்து தான் வாய் கொண்டமட்டில் போட்டுக் கொண்டானும்] இப்படித் தன்னுடைய சரீரத்தை தங்கமயமாக மாற்றிக் கொண்டு, மனிதவுருத்தானோ இது, என்று கண்டோர் சொல்லும்படியான ஸ்திதியில் வெளிவர கஜானுவாயி வில் நின்றுகொண்டிருந்த க்ரூஸஸ் மனப்பூர்ணமாய் ஆநந்தித்து, அந்த க்ரேக்கனுக்கு அளவிடற்கரிய ஐச்வர்யங்களைத் தந்தனுப்பினுனென்றும் க்ரேக்க சரித்திரங்கள் கூறுகின்றன.

அயோனியாவிற்கு மேற்கில் 'ஈஜியன்கடல்' என்ஞெருசமுத்திரத்தின் பாகமுண்டு. அதற்கும் மேற்கில் க்ரேக்கர் தேசமாகிய க்ரீஸ் இருக்கிறது. அத்தேசத்தில், அக்காலங்களில், ஐச்வர்யத்திற்காகவும், ராஜரீக தந்த்ரங்களில் தேர்ச்சிக்காகவும், நாகரிகத்திற்காகவும், அதில் ஜநித்த அநேகம் உத்தம புருஷர்களுக்காகவும், பேர்போனது ".ஆதென்ஸ்" என்ஞெருநகரம். அந்நகரத்தில் அக்காலத்தில் ஸோலன் என்ஞெரு மகா புத்திமானிருந்தார். இவர் மேனுட்டு ஸ்மிருதி கர்த்தர்களில் மிகச்சிறந்தவர்களுள் ஒருவர். இவருக்கு ஒருஸமயம் பலதேசங்களிலுமுள்ள பலவகைப்பட்ட விநோதங்களையும் நாகரிக வேறுபாடுகளையும் பார்த்துவரவேண்டுமென்ற ஆசையால் வெளிதேசங்களுக்கு ப்ரயாணம் செய்தார். அந்தப்ரயாணத்தின் மத்தியில் லிடியாதேசத்திற்கும் வந்து க்ரூஸஸ் அரசனுடைய 'பேட்டி' வாங்கினர்.

ஸோலன் என்பவருடைய க்யாதியைப்பற்றி நிரம்பக்கேள்விப் பட்டிருந்த க்ரூஸஸ் அவருக்கு மிகுந்த உபசரணைகளெல்லாம் செய்து, முடிவில் அவரையிட்டுக் கொண்டுபோய், தன்னுடைய விஸ்தாரமான கஜானக்களை ஒன்றன்பின் ஞென்ருகக் காட்டிக்கொண்டே வந்தான். இவைகளை வெகு பொறுமையுடன் பார்த்து வந்த 'ஸோலன்' முகத்தில் ஆச்சர்யக் குறிகள் ஒன்றும் புலப்படவில்லை. இதைக்கண்ட க்ரூஸஸ் மிகுந்த ஆச்சர்யமடைந்தான். இதுவரை தன்னுடைய பொக்கிஷ சாலைகளை வந்துபார்த்தவர்,

களில் வியப்படையாதவரே கிடையாது. ஸோலனும் அவ்விதம் வியப்பாரென்று க்ரூஸஸ் கருதியிருந்தான்.

"எல்லாம் ஆயிற்று? இன்னம் பாக்கியிருக்கிறதோ' என்று நீரஸமாய் [* நிர்க்கதரஸமாயிருக்கும்படி—tamely ] க் கேட்டார் ஸோலன்.

"இவ்வளவுதான். ஸ்வாமி! ஆனால் இத்தனை ஐச்வர்யம் ஒருவன் படைத்திருப்பது ஆச்சர்யமாய்த் தோன்றவில்லையா ?" என்று வினவினான் க்ரூஸஸ்.

"அதிலென்ன ஆச்சர்யம் ?"

"இது கிடைத்தற்கரிய பெருமையல்லவா ?"

"பெருமையென்று எனக்குத்தெரியவில்லை."

அரசன் அவர் மறுமொழிகேட்டு சற்றுத் தயங்கி நின்றான். ஸோலன் ஒன்றும் பேசவுமில்லை முகத்தில் எவ்வித மாறுதலும் தென்படவில்லை. உடனே க்ரூஸஸ் வேறொரு கேள்விகேட்டு, ஸோலனை மடக்கி விடலாமென்று எண்ணினான்.

ஸ்வாமி! உலகத்திற்குள் யாவரிலும் குறையற்ற ஆநந்த புருஷன் யார் என்று மதித்திருக்கிறீர் ? என்று அரசன் கேட்டான். அரசனுடைய உத்தேசம் தன்னையேதான் ஸோலன் சொல்லவேண்டி வருமென்று.

ஆனால் ஸோலன் பதிற்சொன்னதாவது :—"உலகத்தில் யாதினும் குறையற்ற ஆநந்தபுருஷனெனப்படுவோன் 'ஆதென்ஸ்' நகரத்திலிருந்த 'டெல்லஸ்' என்பவனே. அவன் தான் என்று சொல்லுவானேன்

என்றால் ; அவன் உயிரோடிருந்த காலத்தில் நாட்டார் அனைவரும் பெருமையுடன் வாழ்ந்து வந்தார்கள். அவனுக்கும் குழந்தை குட்டிகள் யதேஷ்டமாய்ப் பிறந்தனர். அவர்களும் வெகு நல்லவர்களாகவும், பெற்றோர் வார்த்தைகளுக்கடங்கியும் நடந்தார்கள். அவர்கள் அங்கஹீனம் முதலிய குறைகளில்லாமல் ஸௌந்தர்யவான்களாகவும், ஸௌந்தர்யவதிகளாகவும் விளங்கினார்கள். அக்குழந்தைகள் முன்னுக்கு வந்து பெருமை பெற்று உலகில் ஓங்கியதை டெல்லஸ் கண்ணாரக்கண்டான். முடிவில் தன் தேசத்தின் க்ஷேமத்தைப்பற்றிய வோர் யுத்தத்தில் எதிர் நின்று போராடி மரணத்தால் மிகுந்த கௌரவம்பெற்றான். அவனுடைய நாட்டார் அவனைத் தெய்வமாகக் கொண்டாடினர்" என்றார்.

இதில் ஐச்வர்யத்தின் பெருமையைப்பற்றி ஒரு வார்த்தைகூட இல்லை. ஆநந்தத்திற்குக் காரணம் ஐச்வர்யம் என்று ஸ்வல்பம் கூட ஸோலன் ஒப்புக் கொள்ளுவதாகவில்லை. ஆகவே, சற்றுக் கோபமடைந்த க்ரூஸஸ் "ஆனால் என்னுடைய பேறனைத்தும் ஒன்றுக்கும் உபயோகமற்றதாகவா உமக்குத் தோன்றுகிறது? டெல்லஸ் என்பவரைக்காட்டிலும் நானே ஆநந்தவான் என்று உமக்குத்தோன்றவில்லையா?" என்று சற்று வெடித்த குரலாகவே கேட்டான்.

ஆனால் ஸோலன் அதனால் அசையவில்லை. முகத்தில் சற்றும் வேறுபாடில்லாமல் "க்ரூஸஸ்! டெல்லஸ் என்பவரைக்காட்டிலும் நீ பாக்கியசாலியல்லவென்று

சொல்லமுடியாது. ஏனெனில், இனி வரவிருப்பதை யார் கண்டார்? ஐச்வர்யம் பலவிதமான போகங்களுக்கும் காரணமென்பது வாஸ்தவமாயினும், இந்த ஐச்வர்யம் நிலையுள்ளதில்லை. நாளைக்கே இவை யனைத்தும் உன்னைவிட்டு நீங்கக்கூடும். ஆகையால் முடிவிற்கு முன் ஒரு கார்யத்தை இன்னபடி என்று எப்படி நிர்ணயிக்கலாகும்?'' என்று ஸோலன் சொன்னார்.

அரசனுக்கு இந்த ஞானரஸஒழுக்கையுடைய வசனங்கள் செவிக்கினிதாய்ப்புகவில்லை. தான் முன்னம் ஸோலனுக்குச் செய்தனுப்புவதாக யோசித்திருந்த மரியாதைகளையும் செய்யாமல் அவரை ஊருக்கனுப்பிவிட்டான்.

ஸைரஸ் அரசனானபிறகு, அவன்மீது முதன் முதலில் படையெடுத்துவந்தது இந்த க்ரூஸஸ் என்னும் லிடிய வரசனே. இவருக்கு ஹாலிஸ் நதிக்கு அப்புறத்திலுள்ள தேசங்களை ஜயித்துத் தன் ராஜ்யத்தை விஸ்தாரப்படுத்திக்கொள்ள வேண்டுமென்று நோக்கம். இந்த யுத்தத்தில் ஜயம் தனக்குக் கிட்டுமா கிட்டாதா வென்ற ஸந்தேஹத்தை தெய்வமுகமாக அறிந்து கொள்ள வேண்டுமென்று மெண்ணினன்.

க்ரீஸ் தேசத்தில் டெல்பி (Delphi) என்றொரு இடமுண்டு. நம்முடைய தெய்வங்களின் முதன்மை ஸ்தானம் வஹிக்கும் பரமசிவனுக்குக் கைலாஸமும், விஷ்ணுவிற்கு வைகுண்டமும், ப்ரஹ்மாவிற்கு ஸத்ய லோகமும்போல், க்ரேக்கர்களின் முக்கிய தெய்வமான அபால்லோவிற்கு இந்த 'டெல்பி' என்னும் ப்ரதேசமே

முக்யஸ்தானமாக வ்யவஹரிக்கப்பட்டிருக்கிறது. நம்முடைய நாட்டில் கருப்பர், முத்துவீரகுமாரன், காளி முதலிய தெய்வங்களுக்குப் பூசாரிகள் இருப்பது போல், இந்த அபால்லோவிற்கும் பூஜை செய்யும் ஆசார்யர்கள் உண்டு. இவர்கள்மீதும் அவசியமான ஸமயங்களில் அபால்லோ வந்திறங்குவதினுல் ஆவேசம் வருவதுண்டு. அத்தகைய ஸமயங்களில் அவர்களை யாவரும் கேள்விகள் கேட்கலாம். அக்கேள்விக்கு அவர்கள் குறிப்பாக விடையளிப்பார்கள். அவ்விடைகளில் இருபொருள் அல்லது பலபொருள்படும்படி வார்த்தைகள் அமைக்கப்பட்டிருக்கும். அதெப்படி யென்பது இக்கதையின் போக்கிலேயே வெளியாகும். க்ரேக்கர்கள் எந்தப் பெரிய கார்யம் ஆரம்பிப்பதானுலும் இந்த டெல்பியில் குறிகேட்காமல் ஆரம்பிப்பதில்லை. இதற்கு டெல்பிக் ஆரகிள் (Delphic Oracle) என்று பெயர்.

'டெல்பிக் ஆரகிள்' சொல்லுவது வாஸ்தவமாயிருக்குமா? அதை நம்பி ஒரு கார்யம் செய்யப்புகலாமா? என்றே முதலில் தீர்மானம் செய்து கொள்ள வேண்டு மென்று க்ரூஸஸ்ஸுக்குத் தோன்றிற்று. உடனே சிலவேவுகாரர்களை யனுப்பி, ஒரு குறிப்பிட்ட தினத்தில், குறிப்பிட்டநேரத்தில்அரசன் என்ன செய்து கொண்டிருக்கிறுன் என்று டெல்பியில் பூசாரிகளை ஆவேசத்தால் அறிந்து சொல்லும்படி செய்து, கேட்டு தனக்குத் தெரிவிக்கும்படி ஆக்ஞாபித்தான். அப்படியே வேவுகாரர்கள் 'டெல்பி'க்கு வந்து, செய்ய

வேண்டிய சடங்குகளெல்லாம் செய்துமுடித்து, பூசாரிகளுக்கு ஆவேசம் வந்தவுடனே அரசன் தங்களையனுப்பிய கார்யத்தைத் தெரிவித்தார்கள். அவர்களிலொருவன் "அரசனு! இந்த ஸமயம் ஒரு செப்புப்பாத்திரத்தில் ஆமைமாம்ஸத்தையும் வெள்ளாட்டுக்குட்டி இறைச்சியையும் ஒன்று சேர்த்து வேகவைத்துக் கொண்டிருக்கிறுர்" என்றுன். அதை வேவுகாரர் அரசனிடம்வந்து சொல்ல, அரசனுக்கு நம்பிக்கை வந்தது. "பாரவீகத்தரசன் மீது படையெடுத்துச் செல்லலாமா? கூடாதா?" என்று கேட்டு வரும்படி தூதுவர்களை அனுப்பி, சிறந்ததும் விலையுயர்ந்ததுமான 'இனும்ஸனும்' முதலியவைகளையு மனுப்பி வைத்தான்.

டெல்பிக்குப்போன தூதுவர்கள், "க்ரூஸஸ் பாரவீகத்தின் மீது படை யெடுப்பானுனல், ஒரு விஸ்தாரமான ராஜ்யம் அன்றேடொழிந்தது" என்ற பதிலுடன் திரும்பி வந்தார்கள். அரசனுக்கு ஸந்தேகமொழிந்தது. உத்ஸாகபரனுனன். ஆகவே பெருத்த ஸைந்யமொன்றை வெகுவிரைவில் ஸந்நத்தப்படுத்தி, ஹாலிஸ் நதியைத் தாண்டி ஸைரஸ் ராஜ்யத்திற்குள் ப்ரவேசித்தான். இதைக்கேட்ட ஸைரஸ் தன்னுடைய ஸைந்யங்களையும் 'முஸ்தீப்' செய்து கொண்டு, வந்தெதிர்த்தான். ஆனல் நடந்த யுத்தத்தில் ஜயம் இன்னருடைய பக்கம் என்று சொல்லுவதற்கில்லாமற் போயிற்று. தனக்குள்ள துணை வலியையு மழைத்துவந்தால் ஸைரஸ்ஸை ஸுலபமாய் அபஜயப்படுத்தலாமென்று க்ரூஸஸ் எண்ணி, ஊருக்குத்திரும்பி, தன்னுடைய ஸைநிகர்

களைப் பிரித்து அவரவர் இஷ்டப்படி போகும்படி விடுத்தான். ஆனால் அடுத்த வருஷம் அதே காலத்தில் மறுபடி பாரவீகத்தின்மீது படையெடுப்பதாகச் சொல்லியிருந்தான்.

இங்கே ஸைரஸ் வேறுவிதமாக யோசிக்கலானான். க்ரூஸஸ் தன்னுடைய ஸேனைகளைத் திரட்டிக் கொண்டு ஊருக்குப்போய் விட்டான். ஆனால் பாரவீகத்தின்மீது படையெடுத்து, அதைத் தன்னதாக்கிக் கொள்ளவேண்டு மென்கிற வெண்ணம் அவன் மனதை விட்டகன்றிருக்கும் என்றெண்ண முடியாது. ஆகையால், இன்னும் பலமான ஸைந்யம் கொண்டுவர வேண்டு மென்ற எண்ணத்தாலன்றோ அவன் திரும்பிப்போயிருப்பதாகத் தோன்றியிருக்கிறது. ஆனால் அவ்விதம் ஏற்பாடு செய்து முடிக்க, அவனுக்கு இன்னும் ஒரு வருஷகாலம் பிடிக்கும். ஆகையால் இப்பொழுது திரட்டப்பட்ட ஸைந்யத்தை யப்படியே ஒருவருஷ காலம்வரை ராஜதானியிலேயே ஒன்றாகவே வைத்திருக்கமாட்டான் என்பது திண்ணம். ஆதலின் இப்பொழுதே படையெடுத்துச் செல்வோமானால், அவனை அபஜயப்படுத்துவதுடன், பாரவீகத்திற்கேற்பட்ட பயத்தையும் ஒரு வழியாய் ஒழித்துவிடலாம். "நகத்தால் கிள்ளி யெறியக்கூடியதை கோடாலி கொண்டு வெட்டவேண்டிய ஸ்திதிவரை விடக்கூடாது."

என்றிப்படி யோசித்துத் தீர்மானம் செய்து கொண்டு ஸேனையை வெகு விரைவாய் நடத்தி, ஹாலிஸ் நதியைத்தாண்டி, லிடியாவின் ராஜதானியான

'ஸார்டிஸ்' என்னும் பட்டணத்தின் மதில்களின்முன் திடீரெனத் தோன்றினன். ஸைரஸ் நினைத்தபடி க்ரூ ஸஸ், தன் ஸேனையின் பெரும்பாகத்தை யனுப்பிவிட்டா னுனாலும், மிக ப்ரக்யாதிபெற்ற தீர வீர பராக்ரமசாலிக ளான அநேகம் குதிரைப்படையாட்களை தன்னை விட்டு நீங்காது வைத்திருந்தான். ஸைரஸ் ஸேனை களைப் புறங்காட்டி யோடும்படி செய்வதற்கு இக்குதி ரைப்படையும் மீதமிருந்த காலாட்களும் நிச்சயம் போதுமென்று க்ரூஸஸ் இறுமாந்திருந்தான்.

லிடிய அரசனுடைய குதிரைப்படைகளின் செய் தியும் அவர்களும் தீர வீர பராக்ரமங்களும், அஞ்சா நெஞ்சும், ஒற்றுமையும், அவர்கள் வந்தெதிர்க்கும் வேகமும் ஆகிய அந்த ஸேனையின் ஸத்வ முழுவதும் இன்னதில் அடங்கியிருக்கிறது என்று ஸைரஸ் அறியாமற் போகவில்லை. குதிரைகளை வெருளும்படி செய்து, படையாட்களுடைய கைகளில் அடங்காமல் போகும்படி ஏற்படக்கூடுமானல் தன் பக்கந்தான் ஜயம் என்பதில் ஸந்தேஹமில்லை என்று ஸைரஸ் முன்ன மேயே கணக்குப் பார்த்துவிட்டான். குதிரைகளுக்கு ஒட்டகங்களைக்கண்டால் ஸ்வாபாவிகமான பயமுண் டென்று பாரஸீகவரசன் தெரிந்து, தன்னுடைய ஸேனைகளை யழகாக அணிவகுத்து, யுத்த ஸந்நத்த மாய் நிறுத்தி, எல்லா ஸேனைகளுக்கும் முன்னிலையில் ஒருவரிசை ஒட்டகங்களைக்கொண்டுவந்து நிறுத்தினன்.

யுத்தம் ஆரம்பிக்கப்பட்டது. லிடியக் குதிரை வீரர்கள் ஒரே வரிசையாய் நாற்கால் பாய்ச்சலில், தங்

களுடைய கைகளில் பிடித்த உருக்கு ஈட்டிகள் ஸூர்ய வெளிச்சம் அவைகளில் ப்ரதிபலிப்பதால் பளபள வென்று மின்ன, ஸைரஸ் ஸேனையை வந்தெதிர்த்தார்கள். குதிரைகள் ஸமீபம் வந்ததும் பயங்கரமாய் ஒட்டகங்கள் ஒரேவரிசையாய் நிற்பதைக்கண்டு பயந்து, வெருண்டு, பல திசைகளிலும் ஓட ஆரம்பித்தன. வீரர்கள் குதிரைகளை நிறுத்தி, ஸமாதானப்படுத்த தங்களாலான சாகசக்யங்களெல்லாம் செய்து பார்த்தனர். ஒன்றிலும் முடியவில்லை. ஸமயம் கண்ட ஸைரஸ் தன்னுடைய ஸேனா வீரர்களை முன்னேக்கிச் செல்லும்படி ஆக்ஞாபித்தான். விடிய ஸேனா வீரர்களைப் பாரஸீகர் கண்டதுண்டமாக்கினர். மீத மிருந்தவர் ராஜதானிக்குள் போய் சரணமடைந்தனர்.

ஸார்டிஸ் பட்டணம் முற்றுகை போடப்பட்டது. பட்டணம் பிடிபட வெகுநாளாகவில்லை. ஸார்டிஸ் பிடிக்கப்பட்டது.

க்ரூஸஸ் என்பவரை உயிருடனே கைதியாகப் பிடிக்கவேண்டுமென்று ஏற்கனவே போர்ச் சேவகர்களுக்கு ஸைரஸ் உத்திரவுசெய்திருந்தான். அப்படியிருந்தும், அவரைப் பிடித்த ஒரு பாரஸீக போர்ச் சேவகன் கையை யோங்கி அவரை வெட்டுந்தருவாயில், அவருடன் கூட விருந்தவனும் பிறவி யூமையுமான க்ரூஸஸ் என்பவருடைய குமாரன் திடீரென்று பேசும் சக்திபெற்று "ஐயா! க்ரூஸஸ் அரசனைக் கொல்லாதேயுங்கள்! அவர்தான் ஐயா க்ரூஸஸ்" என்று உரக்கக் கத்தினன்.

அப்போர்ச் சேவகனுக்கும் தான் கொல்லவிருந்த மனிதன் க்ரூஸஸ் என்று முன்னமேயே தெரியாது. தெரிந்திருந்தால் அவரைக் கொல்ல யத்தனித்திருக்க மாட்டான். க்ரூஸஸ்ஸோ தன்னுடைய துக்கத்தினால் நிராசையாகி, இறப்பதே மேன்மையென்று கருதி விட்டார். ஆகையால் கத்தியை வீசி யோங்கின போர்ச் சேவகனைத் தடுக்கவுமில்லை. தன்னை பின்னு னென்று வெளியிடவுமில்லை. இப்பொழுது போர்ச் சேவகனுக்கு அவர்தான் க்ரூஸஸ் என்று தெரிந்த வுடனே அவரை யழைத்துக்கொண்டுபோய் ஸைரஸ் முன்னிலையில் நிறுத்தினான்.

க்ரூஸஸ்ஸை சித்ரவதை செய்கிறதென்று முதலி லேயே ப்ரதிக்ஞை தனக்குள்ளேயே செய்து கொண்டிருந்தவர் ஸைரஸ். ஆகவே அவர் தன்னு டைய வேலைக்காரர்களுக்கு, கட்டைகளை தாராளமாய் அடுக்கி, அவைகளின்மீது க்ரூஸஸ்ஸை நிறுத்தி, கட் டைகளில் நெருப்பு வைத்து விடும்படி ஆக்ஞாபித்தார். இந்த பயங்கரமான வார்த்தைகள் காதில் விழவும் புத்தி கலங்கின க்ரூஸஸ்முன் ஸோலனுடைய உருவம் வந்து நின்றதுபோல் தோற்றமுண்டாயிற்று! உயி ருள்ளவரை ஒருவனையும் பூரண பாக்யசாலியென்று சொல்லமுடியாது என்று அவர் சொன்ன வாசகம் க்ரூஸஸ் நினைவிற்கு வந்தது. தனக்கு அந்த ஸமயத் தில் அப்ரிய மிருந்தாலும் பரிணாமத்தில் (முடிவில்) நிலைப்பதான அவருடைய வார்த்தையை யவமதித் தோமே என்று பச்சாத்தாபமுண்டாயிற்று. "ஓ

ஸோலன்! ஓ ஸோலன்'' என்று அலறினான் க்ரூஸஸ். கண்களில் நீர் தாரை தாரையாய்ப் பெருகினது. வேறொன்றும் சொல்லுவதற்கு அவனால் முடியாமல் போயிற்று.

இந்த விசேஷங்களைக் கவனித்த ஸைரஸ், க்ரூஸ்ஸைத் தருவித்து, "இறக்கப்போகும் ஸமயத்தில் கடவுளுடைய பெயர்களைக் கீர்த்தனம் செய்யவேண்டியதிருக்க, யாரோவொரு மனிதனுடைய பெயரை வாயோயாமல் சொல்லிக்கொண்டிருக்கிறாயே! அதன் தாத்பர்யம் என்ன?'' வென்று வினவினான். க்ரூஸஸ் "ஓ! ஸோலன் ஓ! ஸோலன்!'' என்று கதறினானே யொழிய, பதிலொன்றும் சொல்லவில்லை. முடிவில் ஸைரஸ் நயபயமாகப் பலவாறு வற்புறுத்திக் கேட்டதின்பேரில், ஸோலன் தன்னுடைய ராஜதானிக்கு வந்திருந்தது முதலிய கதைகளை ஸவிஸ்தாரமாய்ச்சொல்லி "ஸோலனே! ஞானி. எனக்கு அந்த காலத்திலேற்பட்டிருந்த வைபவத்தால் இறுமாந்து கண்கெட்டேன். ஸோலனே ஞானி!'' என்று ஆறுதல் அரற்றினான்.

இந்தக் கதையைக்கேட்ட ஸைரஸ் மனதிலும் ஸோலனுடைய ஞானநுபவ வாசகங்கள் சுறுக்கென்றுதைத்தன. "நமக்கிப்பொழுதேற்பட்டிருக்கும் விபவம் என்ன சாச்வதம். இன்றைக்குக் குடைநிழலிலிருந்து குஞ்சர மூர்ந்தோனாயினும், நாளையே நடை மெலிந்தோரூர் நண்ணினும் நண்ணும்படியேன் நேரக்கூடாது? க்ரூஸஸ் விஷயத்தில் நான் இன்று தயைகாட்டாவிடில் நாளை என் விஷயத்தில் யார் தயை காட்டுவார்? ஆகையால்

உத்திரவிட்டது பிசகு" என்று எண்ணலானன். க்ரூஸஸ்ஸை தஹிப்பதற்காக ஏற்பட்ட நெருப்பை யுடனே தண்ணீர் விட்டவிக்கும்படி உத்திரவுசெய்தான் ஸைரஸ். அன்று முதல் க்ரூஸஸ்ஸை தன்னுடைய பக்கத்திலேயே இருத்திக்கொண்டு அவனுடைய புத்தி வாதத்தைக் கேட்டு நடந்து வந்தான்.

ஒரு ஸமயம் ஸைரஸ் "க்ரூஸஸ்! உனக்கு என்ன விருப்பமிருக்கிறதோ அதைக்கேள். நான் கொடுப்பதற்கு வித்தமாயிருக்கிறேன்" என்றான். க்ரூஸஸ் தன்னை விடுவிக்க வேண்டுமென்று கேட்கவில்லை. தன்னை ஆசைகாட்டி மோசத்திலழுத்திய 'டெல்பிக் ஆரகிளுக்குத்' தகுந்த மரியாதை செய்யுத்தனக்கு உத்திரவுகொடுக்க வேண்டு மென்று வேண்டிக் கொண்டான். "அரசன் அதற்கு நீ இப்போழுது போக வேண்டியதில்லை. டெல்பிக் ஆரகிள் பொய்த்ததற்கு என்ன காரணமென்று முதலில் அவர்களையே விசாரித்துக்கொண்டு பிறகு வேண்டியது செய்வோம்" என்று சொல்லவும், க்ரூஸஸ் அதற்கிசையவே ஸைரஸ் சில தூதுவர்களையழைத்து, அவர்களிடம் க்ரூஸஸ் காலில் ஆதியிலிடப்பட்டிருந்த விலங்குகளைக்கொடுத்து, அதையெடுத்துக் கொண்டுபோய் டெல்பியில் ஸ்வாமியின் ஸந்நிதியில் வைத்து, "இங்ஙனமானதேன். உங்களுடைய வார்த்தைகள் பொய்யா?" என்று கேட்கும்படி அவர்களுக்கு போதித்து ஸைரஸ் அனுப்பினன்.

சில நாட்களில் தூதர்கள் திரும்பி வந்தார்கள். விசாரிக்குமளவில் "அது க்ரூஸஸ் என்பவருடைய

குற்றமே! இங்கே உத்திரவான தெல்லாம் கூடி "க்ரூஸஸ் பாரஸீகத்தின்மீது படையெடுப்பானுனல் ஒரு பெரிய ராஜ்யம் நாசமடையும்' என்றே. எந்த ராஜ்யம்? என்று க்ரூஸஸ் கேட்காமற்போனது யார் குற்றம்"? என்று டெல்பியில் விடை பிறந்தது'' என்று தூதுவர் சொன்னுர்கள். க்ரூஸஸ் தன்மீதுதான் பிசகென்று தீர்மானித்து, ருப்தி படைந்தான்.

விடியாவிற்கு மேற்றிசையில் அயோநியா என்று ஒரு சிறு தேசம். அதில் க்ரேக்கர்கள் குடியிருந்தார்கள். அவர்கள் க்ரூஸஸ் ராஜ்யத்தைச் சேர்ந்த ப்ரஜைகள். ஸைரஸ் விடியாவின் மீது படை யெடுத்த காலத்தில், "உங்களுடைய அரசனுகிய க்ரூஸஸ்ஸுக்கு விரோதமாய் கிளம்பி என்னுடைய பக்ஷத்தில் சேருவீர்களானுல், பிற்காலத்தில் உங்களை மிகவும் கௌரவமாய் நடத்துவதாக வாக்களிக்கிறேன்'' என்று ஸைரஸ் அயோனியர்களுக்கு சொல்லியனுப்பியிருந்தான். அவர்கள் அப்பொழுது அவன் சொன்ன வார்த்தைகளை பொருட்படுத்தாக எண்ணவில்லை. ஆனுல் 'ஸார்டிஸ்' பட்டணம் பிடிபட்டதும், அவர்கள் எல்லோரும் ஒன்றுகூடி, தங்களையும் தம்முடைய ப்ரஜைகளையும் ஏற்றுக் கொள்ளும்படி ஸைரஸ் முன்னிலையில் விக்ஞாபனம் செய்துக்கொண்டார்கள். ஆனுல் ஸைரஸ் அவர்களுக்கு நேராக மறுமொழி கூருமல், ஒரு கதையெடுத்துச்சொன்னுன். அதாவது:—

"முன்னொருகாலத்தில் ஒரு நாகஸ்வரக்காரன் இருந்தான். அவனுக்கு மீன் தேவையாயிருந்தது. அதற்காக

அவன் கடற்கரையோரமாய்ப் போய்ப் பார்த்தபொழுது ஜலத்தில் கொழுத்த மீன்கள் ஸந்தோஷமாய்த் துள்ளி விளையாடிக்கொண்டிருந்தன. உடனே கையிலிருந்த நாகஸ்வரத்தையெடுத்து, வாசிக்க ஆரம்பித்தான். வாத்தியத்தைக்கேட்டு அவைகள் கரைக்கு வந்து தாளத்திற்குத் தகுந்தபடி கூத்தாடுமென்பது அவனுத்தேசம். ஒரு மீனாவது வெளியே வரவில்லை. இந்த உபாயம் கைகூடிவராது என்று கண்ட நாகஸ்வரக்காரன் வீட்டிற்குப்போய் ஒரு வலையை ஸம்பாதித்துவந்து, ஸமுத்திரத்தில் வீசி, பல மீன்களைப் பிடித்து, கரையில் உதறினான். அப்பொழுதவை குதித்துக்குதித்தாடத் தலைப்பட்டன. ஆனால் அந்த நாகஸ்வரக்காரன் அவைகளை கண்டு சிரித்து, "ஆம், வாஸ்தவந்தான். இப்பொழுது ஆடி என்ன செய்கிறது. இந்த ஆட்டம் முன்னமேயே போட்டிருக்கவேண்டியது. அப்பொழுது நான் வாத்தியத்தை வாசித்த காலத்தில் உங்களுக்குத் தயவில்லை. வந்தாடமாட்டேன் என்றீர்கள். எனக்கிப்பொழுது இஷ்டமில்லை. உங்களை ஆடவிடுவதாக உத்தேசமில்லை என்று சொல்லி, அவைகளைப் பொறுக்கிப் பெட்டியில் போட்டுக்கொண்டுபோய் விட்டான்."

இந்தக் கதையின் அர்த்தம் அயோநியர்களுக்கு நன்றாய் விளங்கிற்று. அவர்களுக்கு எவ்வித ஸ்வாதந்தர்யமும் கொடுப்பதாக ஸைரஸ் உத்தேசிக்கவில்லையென்று கண்டார்கள். ஆகவே அவர்கள் அரசனுக்கு விரோதமாய்க் கலகம் செய்தார்கள். ஸைரஸ் அவர்

களை யடக்குவதற்காக ஹார்பகஸ்ஸையே தளகர்த்த ணுக நியமித்தான். அவனும் வெகு சீக்கிரத்தில் அகோரியர்களின் அதிக்கிரமத்தை யொடுக்கி அவர் களை க்ரமமான ப்ரஜைகளாக்கினுன்.

இவைகளைத்தவிர ஸைரஸ்ஸைப்பற்றிய சிறு கதைகள் எவ்வளவோ இருந்தாலும் உங்களுக்கு ஸ்வா ரஸ்யம் கொடுக்கக்கூடியவை இவைகளே என்றெண்ணு கிறேன். இவருடைய மற்ற சரித்ரங்களை நீங்கள் பெரியவர்களாகி வாசிப்பீர்கள். ஸைரஸ் வெகுகாலம் அரசாண்டான். முடிவில் தன் தேசத்திற்கு வடக்கே யுள்ள சில காட்டுமிராண்டி ஜனங்களை யடக்கச்சென் றிருந்த காலையில், அவர்களால் ஸைரஸ் கொல்லப் பட்டான். அவனுக்குப்பிறகு அவனுடைய குமாரனுன காம்பைஸீஸ் பட்டத்திற்கு வந்தான். அவனுடைய சரித்திரம் அடுத்த புஸ்தகத்தில் வாசிப்போம்.

(ஸம்பூர்ணம்.)





THE MODERN PRINTING WORKS, MOUNT ROAD, MADRAS.